உல்லாசம்!
வண்ணச் சிறப்பு!

பெண்களின்
உள்ளத்தைத்
தொட்டிழுக்கும்
பிரிண்டுகள்




# மபத்லால் க்ரூப் பிரின்டெட் பாப்ளின்

'டெரீன்'/காட்டன் டெரிலீன்ஸ்டு மற்றும் மாபிரீனஸ்டு ரகங்கள்

ஸ்டாண்டர்டு, பம்பாய் • ஸ்டாண்டர்டு (நியூ சைனா), பம்பாய் • ஸ்டாண்டர்டு தேவாஸ் • மபத்லால் ஃபைன், நவ்ஸாரி-யூனிட் நம்பர் 1 • மபத்லால் ஃபைன் (ஸஸூன்), பம்பாய்-யூனிட் நம்பர் 2 • மபத்லால் ஃபைன் (நியூ யூனியன்), பம்பாய்: யூனிட் நம்பர் 3 • நியூ ஷோரக், அகமதாபாத்-நியூ ஷோரக், நடியாத் • ஸூரத் காட்டன், ஸூரத் • மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்.

M. 488 TAM

# மிகவும் சிறந்த டிரான்ஸிஸ்டர் பிரபல



2 பாண்ட்
ரூ. 175.00



2 பாண்ட்
ரூ. 175,00



மீடியம் வேவ்
ரூ. 110.00



2 பாண்ட்
ரூ. 220.00

# மர்பி டிரான்ஸிஸ்டர்



3 பாண்ட் ரூ. 283.00



மாடல் டி 0816
3 பாண்ட்
ரூ. 415.00



மீடியம் வேவ் ரூ. 125.00

மர்பி டிரான்ஸிஸ்டருக்கு, பெரிய அளவு டார்ச் பாட்டரிகள் போதும்.
விலைகள் எக்ஸைஸ் தீர்வை உள்பட்டவை. விற்பனை வரி தனி.

## உன்னத ஒலிநயம், சிறந்த அமைப்பு, சகாய விலை

மர்பி ரேடியோ இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன டிரான்ஸிஸ்டர் பாக்டரியில் தயாரிக்கப் பட்டது. ரேடியோ தயாரிப்பில் 20வருட ஆராய்ச்சி அனுபவம் மற்றும் தொழில் நுட்பத்திறனே பின்பலமாகக் கொண்டிருப்பதால், ஒவ்வொரு மர்பி டிரான்ஸிஸ்டரும் சிறந்த டிரான்ஸிஸ்டராக விளங்குகிறது. இதுவரை 75,000க்கும் அதிகமான மர்பி டிரான்ஸிஸ்டர்களும், ரேடியோக்களும் வெளிநாடுகளில் மட்டுமே விற்கப்பட்டுள்ளன. மர்பியின் உயர்ந்த செயலாக்கத்துக்கும், மக்கள் விரும்புவதற்கும் இதை விடச்சிறந்த அத்தாட்சி வேறென்ன வேண்டும்?



**மர்பி** இல்லத்தை மகிழ்விக்கிறது!

MAS 133

படம்: தகவல் ஒலிபரப்பவும் வானிலை பற்றி அறியவும் உதவுகிற பல்ரக செயற்கைச் சந்திரன்களுள் ஒன்று பூமியைச் சுற்றி வருகிறது.



# கல்கி விண்வெளி சிறப்பிதழ்

## பொருளடக்கம்

சௌமிய, ஆனி 29உ • ஜூலை 13, 1969












PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா! - பாரதியார்



மலர் 28 ● இதழ் 50

# அதிகாரிகளும் கட்சிக் குறுக்கீடும்

கட்சிச் செல்வாக்கின் விளைவாக ஒருவர் மந்திரி பதவியை அடையலாம். ஆனால் பதவிப் பிரமாணம் எடுத்துக்கொண்டவுடன் மக்கள் எல்லோரின் ஊழியராகவும் நடந்துகொள்ள அவர் கடமைப் பட்டவர். பொதுப் பணியாற்றுகையில் கட்சி அபிமானம் குறுக்கிடும்படி விடலாகாது. இந்த உயர் நிலையை அடைய மந்திரிகளால் இயலாது போகலாம். கட்சிப் பற்றை அவர்களால் மறக்க முடியாது இருந்தாலும்கூட, அரசாங்கப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் நிரந்தர அதிகாரிகளுக்குச் சில பொறுப்புக்கள் உண்டு. அவர்கள் எக்காரணத்துக்காகவும் எந்தக் கட்சியுடனும் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளக் கூடாது. சொந்த நம்பிக்கை அல்லது எண்ணங்கள், மந்திரிகளின் நிர்ப்பந்தம், யோசனைகள் முதலியவற்றைக் கடமை தவறுவதற்குக் காரணமாக அவர்கள் சொல்லலாகாது.

நிரந்தர அதிகாரிகள் அரசாங்க உத்தரவுகளை நடத்தி வைக்க வேண்டியவர்கள். ஆனால் தமக்கு நியாயமெனப் படுவதற்கு இசைவாக முடிவு செய்து பணியாற்ற வேண்டிய நிர்வாக அலுவல்கள் அவர்களுக்கு விரிவாக இருந்து வருகின்றன. மந்திரிகளோ சட்டசபை அங்கத்தினர்களோ தேர்தல் மூலம் பதவிக்கு வருபவர்கள். அவர்களுடைய இஷ்டத்துக்குத் தமது நியாய உணர்ச்சியை அதிகாரிகள் விட்டுக் கொடுக்கக் கூடாது. உதாரணமாக, குறிப்பிட்ட நபர்களுக்குப் பஸ் மார்க்கங்களுக்கான லைசென்சுகளை வழங்குவதை எடுத்துக் கொள்வோம். எல்லோரும் போட்டா போட்டியாக பஸ்களை விடாமல் குறிப்பிட்ட லைசென்சுதாரர்கள் மட்டுமே விடும்படி கட்டுப்படுத்துவதுதான் இதில் அடங்கியுள்ள கொள்கை. நிரந்தர அதிகாரிகள் நிர்வாக ரீதியில் முடிவு கண்டு லைசென்சுதாரர்களைப் பொறுக்கியெடுக்க வேண்டும். பொறுக்கி எடுப்பது கட்சித் தலைவர்களின் உரிமையாகி விடக் கூடாது. லைசென்சை 'ஏ' என்பவருக்கோ அல்லது 'பி' என்பவருக்கோ வழங்கும்படி இலாகாத் தலைவருக்கு மந்திரிகள் கட்டளையிடக் கூடாது. பொதுமக்களின் நலனைக் கருத்திற்கொண்டு யார் பஸ்களைச் சிறப்பாக விடுவார்கள் என்பதை மதிப்பிட்டு அதிகாரி முடிவு செய்ய வேண்டும். அதிகாரிகளை மாற்றுவதும், குறிப்பிட்ட இடங்களுக்குப் போடுவதும் மந்திரிகளின் உரிமை என்று மதிக்கப்படலாகாது. இலாகாவை நிர்வகிக்கின்ற நிரந்தர அதிகாரி தமது மனச்சாட்சிப்படி முடிவு செய்ய வேண்டிய விஷயம் இது.

மந்திரிகளின் அதிகாரங்களையும் உரிமைகளையும் நிரந்தர அதிகாரிகளின் கடமைகளையும் தெளிவாக இவ்வாறு வரையறுத்துக் கூறுவதுதான் பிரிட்டிஷ் நிர்வாக அமைப்பின் தனி விசேஷம். இதைத்தான் நம் நாடு பின்பற்ற வேண்டுமென்று, சுதந்திரத்தைப் பெற்றுத் தந்த தலைவர்கள் விரும்பினர். மந்திரிகள், கட்சித் தலைவர்கள் ஆகியோரின் குறுக்கீட்டிலிருந்து நிரந்தர அதிகாரிகளுக்குப் பாதுகாப்பு அளிக்காவிடில் நிர்வாகம் சிறிதும் பெரிதுமாக ஊழல் மலிந்து, சீர்ப்படுத்த முடியாததாகிவிடும். அந்நிலையில் பார்லிமெண்டரி ஜனநாயகம் வெறும் கேலிக்கூத்தாகிவிடும்.

இந்தியா — பிரிட்டன் வரலாற்றுச் சங்கம் சென்ற ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. அதன் கால் வருஷ சஞ்சிகையின் முதல் இதழ் வெளிவந்துள்ளது. புகழுடன் பணியாற்றிய சர் பெண்டெரல் மூன் என்ற ஐ. சி. எஸ். அதிகாரி அதில் எழுதியுள்ளார். அவர் இந்தியா சுதந்திரமடைந்தபோது பதவியிலிருந்து ஓய்வு பெற்றவர். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி அளித்துப் போன சிறப்பு அம்சங்களை அதில் அவர் சுட்டிக் காட்டியுள்ளார். சட்டத்தின் ஆட்சி, சுதந்திரமான நீதித் துறை, ராஜ்ய சுதந்திரங்கள், பார்லிமெண்டரி ஆட்சி முறை, தகுதியின் அடிப்படையில் நியமனமாகிப் பணியாற்றும் சிவில் சர்வீஸ்-

ஆகியவை தொடர்ந்து இருக்கக் கூடிய சிறப்பு அம்சங்கள் என்பது அவர் கருத்து.

சட்டத்தின் ஆட்சி என்பது இந்தியாவுக்குப் புதிதல்ல. இதை கி. மு. அல்லது கி. பி. முதல் நூற்றாண்டில் தோன்றிய திருக்குறள் புலப்படுத்துகிறது.

சர் பெண்டெரல் மூன் தமது கட்டுரையில் கூறுகிறார்:

''மொகலாய மரபுகளின் அடிப்படையில் பிரிட்டிஷார் அமைத்த பெரிய நிர்வாகக் கட்டுக்கோப்பு உருப்படியாக இருந்து வந்தது. அதன் பிரதான அமைப்பில் மாறுதலில்லை. தில்லியில், மாநிலத் தலைநகரங்களில், ஜில்லாக்களில், அதே பழைய நிர்வாக இயந்திரந்தான் வேலை செய்து வருகிறது. அகில இந்திய, மத்திய, ராஜ்ய சர்வீசுகள் என்று மூன்றடுக்குகள் முன்போலவே இருந்து வருகின்றன. ஜில்லா நிர்வாகம் தாசில்தார், கணக்குப்பிள்ளை மூலம் கீழ்ப் பகுதிகளை எட்டிப் பிடிக்கிறது. ரயில்வே, தபால்-தந்தி, பொதுப்பணித் துறை, நீர்ப்பாசன இலாகா முதலியவை நீடிக்கின்றன. விதிகள், நடைமுறைக் கோட்பாடுகள் உட்பட அப்படியே பழைய அமைப்பிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டவைதாம். தேவைக்கேற்ப அவற்றில் சிறிய மாறுதல்கள் நடந்ததுண்டு.''

அன்றாட நிர்வாகப் பொறுப்பை வகிக்கின்ற சர்க்கார் அதிகாரிகள் விஷயத்தில் ராஜ்யக் குறுக்கீடுகளும் நிர்ப்பந்தங்களும் இருந்து வருவதாக நான் பன்முறை குறை கூறியுள்ளேன். சர் பெண்டெரல் மூனின் மதிப்பு என் புகாரை உறுதிப்படுத்துகிறது:

''சர்வீசுகளின் மரபுகளைக் கௌரவிப்பதற்கு நிறைய சிரமப்பட்டிருக்கிறார்கள். பதவிகளுக்கான நியமனங்களும் பயிற்சியும் முன்போலவே தொடருவதற்குப் பாடுபடுகிறார்கள். நியமனத்துக்கும் உத்தியோக உயர்வுக்கும் தகுதியே அடிப்படையாக அமைந்து, பட்சபாதமில்லாமல், ராஜ்ய செல்வாக்குக்கு உட்படாமல், ஊழல் இன்றி சிவில் சர்வீஸ் பணியாற்ற வேண்டுமென்பதே லட்சியமாக இருந்து வருகிறது. ஆனால் நடைமுறை நிலவரம் இந்த லட்சியத்தை விட மிக மிக மட்டமாகக் காணப்படுகிறது. சுதந்திரத்துக்குப் பிறகு நிர்வாகப் பதவிகளை வகிக்கும் சிவில் சர்வீஸ் ஊழியர்களின் மீது ராஜ்ய நிர்ப்பந்தம் பெருமளவில் அதிகரித்துள்ளது. அவர்களில் சிலர் அதற்கு இரையாகி விட்டதைக் கண்டு ஆச்சரியப்பட வேண்டியதில்லை. முன்னர் இருந்ததை விட இப்போது அவர்களிடம் பட்சபாதமின்மை குறைந்து விட்டது. நம்பகமும் கம்மியாகி விட்டது; முன்னைவிட அவர்கள் அதிகாரம் குறைந்தவர்களாகி விட்டார்கள். அதிகாரம் குறைந்ததற்குக் காரணங்களில் ஒன்று முன் போல அவர்களுக்கு உயர் மட்டத்தில் பக்க பலமும் ஆதரவும் இல்லை என்பது தவிர அவர்கள் தமது அன்றாட வேலைகளுக்குரிய அதிகாரங்களைச் செலுத்த முடியாதபடி ராஜ்யவாதிகள் குறுக்கிடுவதும் ஒரு காரணம். ராஜ்யவாதிகளின் குறுக்கீடு இடத்துக்கு இடம், காலத்துக்குக் காலம் மாறுபட்டதாக இருப்பதைக் காணலாம். மொத்தத்தில் பொதுமக்களுடன் அன்றாடம் தொடர்பு கொள்ளும் அதிகாரிகளின் நிலைமை பலவீனமடைந்துவிட்டது.

(ராஜாஜியின் ''ஸ்வராஜ்யா'' கட்டுரைச் சுருக்கம்)

# பீஹார் படிப்பினை

**பீ**காரில் ஒன்பதே நாட்கள் பதவி வகித்த பின் பாஸ்வான் மந்திரி சபை கவிழ்ந்து விட்டது. காங்கிரஸிலிருந்து கட்சி மாறிய இருவருக்கும் வேறு ஒரு கட்சியிலிருந்து விலகி வந்த ஒருவருக்கும் மந்திரிப் பதவிகளை அவர் அளித்ததன் விளைவாக இந்த வீழ்ச்சி ஏற்பட்டது. அவர்களைச் சேர்த்துக் கொண்டதை ஆட்சேபித்து, தான் முன்னர் வாக்களித்திருந்த பொது ஆதரவை ஜனசங்கம் வாபஸ் பெற்றுவிட்டது. இதனால் மெஜாரிட்டியை இழந்து பாஸ்வான் விலக வேண்டியதாயிற்று. பத்து நாட்களுக்கு முன் கட்சி மாறாட்டத்தால் பதவி இழந்த காங்கிரஸ் கட்சியினருக்கு மீண்டும் பதவி ஆசை ஏற்பட்டது. ஆனால் அது மறுபடியும் நிறைவேறும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை. ஸ்திரமான மந்திரி சபை இப்போது அமைவது அசாத்தியம் என்று கருதி இரண்டு மாத காலத்துக்கு ராஷ்டிரபதியின் ஆட்சியை கவர்னர் சிபாரிசு செய்துவிட்டார்.

இரண்டு வருடங்களில் கட்சி மாறாட்டங்களால் பீகாரில் ஐந்து மந்திரி சபைகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி மடிய நேரிட்டது சிந்தனைக்குரிய விஷயம். இரண்டு அல்லது மூன்று பெரிய கட்சிகள் மட்டுமே இருந்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது. ஏராளமான சிறு கட்சிகள், பிற ராஜ்யங்களைப் போலவே பீகாரிலும் இருப்பதால்தான் இந்தத் தொல்லையெல்லாம் வந்தது. பீகாரில் நடந்தது போல வேறு பல ராஜ்யங்களிலும் நடைபெறக் கூடும். மத்திய ஆட்சியிலும் பிறகு இப்படி நிகழலாம். இன்றைய நிலைமை நாட்டில் நீடித்தால் பார்லிமெண்டரி ஜனநாயகம் பேராபத்துக்குள்ளாகிவிடும். ஆகையால்தான் கருத்தொற்றுமை உள்ள கட்சிகள் விட்டுக் கொடுத்து ஒன்றுபட்டு இரண்டு அல்லது மூன்று பெரிய கட்சிகள் நாட்டில் ஏற்பட்டாக வேண்டுமென்று சுதந்திரக் கட்சித் தலைவர்களும் காங்கிரஸிலேயே சிலரும் கருதுகிறார்கள். சுதந்திரக் கட்சி, ஜனசங்கம், கிராந்தி தளம் ஆகியவற்றை ஒன்றுபடுத்தும் முயற்சி வரவேற்கத்தக்கது. இதைப் போலவே சோஷலிஸத்தில் நம்பிக்கையுள்ள கட்சிகளும் ஒன்றுபடலாம். ஆனால் கம்யூனிஸ்ட் கட்சிகளுடன் பிறர் ஒன்றுபடுவது சாத்தியமல்ல, விரும்பத்தக்கதுமல்ல. ஜனநாயகத்திலும் தேச பக்தியிலும் நம்பிக்கையில்லாத அக்கட்சி இப்போது மூன்றாகப் பிளவுபட்டுள்ளது; நான்காகவும் உடைபடப் போகிறதாம். இருந்தாலும் அந்த நான்குமே இந்தியாவுக்கு உதவாதவை என்பதை மறப்பதற்கில்லை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

மருத்துவக் கல்லூரிகள், பொறி இயல் கல்லூரிகள் இவற்றில் இடம் பிடிப்பதென்பது லஞ்ச ஊழல் தாண்டவமாடும் நிலைக்களனாகி விட்டது என்று வதந்திகள் கூறுகின்றன. முன்னாள் மந்திரி ஸ்ரீமதி ஜோர்தம்மாள் சைமன் மருத்துவக் கல்லூரியில் சேர விரும்பிய மாணவனிடம் பத்தாயிரம் ரூபாய் லஞ்சம் கேட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்டு இருக்கிறார். இந்தக் குற்றச்சாட்டு நீதி மன்றத்தில் நிரூபிக்கப்பட வேண்டும். எனினும் இந்தப் புகார் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது நல்லதே. வளர்ந்து வரும் ஒரு நிலைமையைத் தடுத்து நிறுத்த இது உதவும். திறமை, தகுதி இவற்றை ஒதுக்கிவிட்டு, அதற்குப் பதில் தொழில் கல்லூரிகளில் சேர விரும்புவர்களிடம் லஞ்சம் கேட்பதும் வாங்குவதும் இடம் பெற்றுவிட்டால் அதைவிட வெட்கக்கேடான விஷயம் வேறில்லை. இந்த நிலைமையை ஒழிக்க அரசாங்கத்தில் பதவி வகிப்போரும், கட்சித் தலைவர்களும் குறிப்பிட்ட ஒரு மாணவன் அல்லது மாணவிக்குக் கல்லூரியில் இடம் கிடைக்க முயலக் கூடாது என்பதுடன் நம்பகமானவர்களும் ஜாக்கிரதையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் அடங்கிய ஒரு குழுவினிடம் தொழில் படிப்புக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும். அக்குழு சுதந்திரமாக இயங்கவும் விடவேண்டும்.

★

என்னால் இதை நம்பவே முடியவில்லை. ஆனால் முக்கியத்துவம் வாய்ந்ததும் மிக அதிகமாக விற்பனையாவதுமான ஒரு தமிழ் நாளிதழில் இந்தச் செய்தி வெளியாகியிருக்கிறது. ஜூலை 12ந் தேதி இடைக்காலத் தேர்தல் நடைபெறவிருக்கும் சாத்தூரில் திரு சி. சுப்பிரமணியம் பிரசார நோக்கத்துடன் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தியபோது அவர், மக்களுக்கு ஓர் 'அறிவுரை' வழங்கி இருக்கிறார். 'காங்கிரஸுக்கு ஓட்டுப் போட உங்களுக்கு மனமில்லையானால் கம்யூனிஸ்டுகளுக்கு ஓட்டுப் போடுங்கள்' என்று கூறி இருக்கிறார்.

இவ்வளவு வெளிப்படையாக, மக்கள் முன்னிலையில் இந்த அளவுக்குக் காங்கிரஸை இறக்க திரு சுப்பிரமணியத்தினால் முடியும் என்று நான் நினைக்கவேயில்லை. தேசம் இன்றுள்ள நிலையில் 'இது இல்லாவிட்டால் அது' என்ற அடிப்படையில் கூட கம்யூனிஸ்டுகளுக்கு ஓட்டுப் போடுங்கள் என்று திரு சுப்பிரமணியம் அறிவுரை வழங்குவார் என என்னால் எதிர்பார்க்க முடியவில்லை. ஆனால் அப்படித்தான் நடந்திருக்கிறது! மிகத் தெளிவாக, திர்க்கமாகப் பத்திரிகையிலும் பிரசுரமாகியிருக்கிறது!

★

சட்டத்தின் ஆட்சி என்பதைத் தர்மம் என்று இந்தியாவில் சொல்கிறோம். எப்போதுமே ஆள்பவர்கள் பிரஜைகள், ஆகிய இரு சாராரும் தர்மத்துக்கு கட்டுப்பட்டு நடந்தார்கள். மக்கள் சட்டத்தால் மட்டுமின்றி, தர்மத்தாலும் ஆளப்பட்டார்கள். 'சட்டத்தின் ஆட்சி' என்பது பிரிட்டிஷார் உருவாக்கிய ஒன்று. ஆனால் அது இந்தியாவில் வாழ்க்கை முறையாகவே நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது, தர்மம் என்ற பெயரில். எனினும் சட்டத்தின் ஆட்சிக்குப் பின்னால் உள்ள அரசாங்கத்தின் அதிகாரமும் சக்தியும் பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவாக எழுந்தவையே. 'சுதந்திர இந்தியாவுக்கு பிரிட்டிஷார் விட்டுச் சென்ற சொத்து சட்டத்தின் ஆட்சி' என்று ஸர் பென்டெரல் மூன் சொல்லும்போது இதைத்தான் குறிப்பிடுகிறார்.

★

தெலுங்கானா மாநிலம் ஏற்பட்டால் அது வரவு செலவுகளைச் சரிக்கட்டிக் கொள்ள இயலுமா என்று சிலர் கேட்கின்றனர். அப்படிப் பார்க்கப் போனால் பொருளாதார ரீதியில் தன்னிறைவுடன் விளங்கும் மாநிலம் —சிறிதோ, பெரிதோ — இந்தியாவில் எதுவுமே இல்லை. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள பொருளாதார ஏற்பாடுகள் மாநிலங்கள் பொருளாதார ரீதியில் தன்னிறைவு காண உதவுவதாக இல்லை. எல்லா மாநிலங்களுமே மத்திய அரசை நம்பித்தான் வாழ்கின்றன. மற்ற பல விஷயங்கள் காரணமாகத் தெலுங்கானா பிரிய நேர்ந்தால் பொருளாதாரத் தன்னிறைவு என்ற பிரச்னை மட்டும் பிரிவினைக்குத் தடையாக நிற்க வேண்டியதில்லை.

### ஆசாரியர் அருள்வாக்கு

நல்லோர்களின் சேர்க்கையால்
பற்றின்மையும் பற்றின்மையால்
மயங்காமையும் மயங்காமையால்
ஸ்திரமான ஞானமும் ஸ்திர ஞானத்
தால் முக்தி நிலையும் ஏற்படுகின்றன.







# வருங்காலத்தில் விண்வெளி

சென்னையில் காரவெல் விமானத்தில் ஏறி இரண்டரை மணி நேரத்தில் பம்பாய் சென்று விடுகிறோம். காசி யாத்திரைக்கு என்று நம்பி மாட்டு வண்டிகளில் பயணம் செய்த நம் மூதாதையர்களைப் பற்றி என்ன நினைக்கிறோம்? ''அப்பா! எப்படித்தான் ரயிலும் விமானமும் இல்லாமல் சமாளித்தார்களோ?'' என்றுதானே!

வருங்காலத்தில் நமது கொள்ளுப் பேரன்களும் எள்ளுப் பேரன்களும், ''விண்கலங்களும் ராக்கெட்டுகளும் இல்லாமல் எப்படித்தான் காலத்தை ஓட்டினார்களோ?'' என்று சொல்வார்கள்!

ஜம்போ ஜெட்டும் ஒலியைவிட வேகமாகச் செல்லும் பிரயாணிகள் விமானமும் வந்துவிட்ட போதிலும், அம்புலிப் பயணம் இன்று ஆரம்ப கட்டத்தில்தான் இருக்கிறது. எதிர்காலத்தில் மனிதன் அம்புலியில் சென்று வசிப்பதும் அம்புலிக்கும் அப்பால் வேறு பல கிரகங்களுக்குச் செல்லுவதும் உறுதி என்று விஞ்ஞானிகளும், விஞ்ஞானக் கதைகள் புனையும் எழுத்தாளர்களும் சொல்கிறார்கள்.

'எழுத்தாளர்கள் கதை அளக்கக் கேட்க வேண்டுமா? கற்பனைக் குதிரையைத் தட்டி விட்டால் அது விண்வெளியிலும் பறக்கும்' என்று கிண்டலாகப் பேசுபவர்கள், ஜூலெஸ் வெர்னெ முன்பு செய்த கற்பனைதான் இன்று கண்ணுக்கு மெய்யாக அப்பாலோ—11 பயணமாக நிகழவிருக்கிறது என்பதை மறந்து விடக்கூடாது. ஆகவே, இன்றைய சிறந்த விஞ்ஞானக் கதைகள் நாளைய உண்மை நிகழ்ச்சிகளாக மாறாது என்று கூறுவதற்கில்லை.

எவரெஸ்டு சிகரத்தின் மீது ஏன் ஏறவேண்டும் என்று எட்மண்டு ஹிலரியை ஒருவர் கேட்டபோது அவர் சொன்னார்: ''எவரெஸ்ட் சிகரம் என்று ஒன்று இருக்கிறதே, அதனால்தான்!''

அதே போன்று சந்திரன் என்று ஒன்று இருப்பதே போதும், மனிதனுக்குச் சந்திரனைச் சென்றடையும் ஆர்வத்தை வளர்க்க. எனினும், அதற்கும் மேலே மனித குலத்துக்குப் பயனுள்ள பல விஷயங்களும் உண்டு.

அத்தியாவசியத் தேவை என்று ஏற்படும் போதுதான் ஆராய்ச்சி சூடு பிடிக்கிறது. எப்பாடுபட்டேனும் சந்திரனைச் சென்றடைவது என்ற தேசிய இலட்சியத்தை அமெரிக்கர்கள் ஏற்படுத்திக் கொண்ட பிறகு அந்த நாட்டில் வியக்கத்தகு விதத்தில் கண்டுபிடிப்புகளும் முன்னேற்றங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

சந்திரனைநோக்கி ஒரு கலத்தை அனுப்புவது என்பதைப் பத்து மைல்கள் தூரத்தில் உள்ள ஓர் ஊசியின் முனையை இங்கிருந்தபடி துப்பாக்கிக் குண்டினால் குறி பிசகாமல் தாக்குவதற்கு ஒப்பாகும் என்றார் ஒரு விஞ்ஞானி. இவ்வளவு சிரம சாத்தியமான காரியத்தைச் செய்வதென்றால் அந்த ராக்கெட்டிலும், அது உயரே எடுத்துச் செல்லும் விண்கலத்திலும் உள்ள முப்பது லட்சம் பாகங்களும் இம்மியளவும் பிசகாமல் இயங்க வேண்டும். சொல்லப் போனால் ஒவ்வொரு பாகமும் நூற்றுக்கு 99·9999 சதவீதம் சரியானபடி செயலாற்ற வேண்டும். விண்வெளிப் பயணத்துக்குத் தேவையான பல தரப்பட்ட பொருள்களைச் சிறிதும் பெரிதுமான இருபதாயிரம் அமெரிக்க நிறுவனங்கள் தயாரிக்கின்றன. இவையெல்லாவற்றிலும் இப்போது ஒரு ஜுரம் பரவி

○ '2001ம் ஆண்டில் விண்வெளி யாத்திரை' என்ற திரைப்படத்தில் விண்கலம் விரையும் தோற்றம்.




○ விமான டிக்கெட் அல்ல, ராக்கெட் டிக்கெட்! வாரத்தில் மூன்று நாட்கள் சந்திரனுக்குப் பயணம் போவதற்கான ஏற்பாடுகளை மேற்கு ஜெர்மனியில், பயண ஏற்பாடுகள் செய்து கொடுக்கும் நிறுவனம் ஒன்று இப்போதே மேற்கொள்ளத் தொடங்கி விட்டது! இதுவரை இருபத்தாறு பேர் அம்புலிப் பயணத்துக்குத் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள். (யூ.பி.எஸ்.)



பிருக்கிறது. அது, நூற்றுக்கு நூறு சுத்தமாக — கச்சிதமாகப் பொருள்களைத் தயாரிப்பது என்ற ஜுரம்தான். இந்த ஜுர வேகம் விண்வெளிப் பயணத்துக்குத் தேவையான பொருள்களைப் பொறுத்தவரை மட்டுமின்றி மற்றத் தயாரிப்புக்களுக்கும் (பேனா முதல் 'ஃபிரிட்ஜ்'வரை; அலுமினியம் முதல் அறுவைச் சிகிச்சை சாதனம் வரை) வேகமாகப் பரவி வருகிறது; வேறு பல தொழில்களையும் பிடித்து வருகிறது.

அம்புலிப் பயணம் பற்றிய பிரச்னைகள் எழுந்த போதெல்லாம் பிரச்னைகளுக்குத் தீர்வு காண — ஆராய்ச்சிகளை நிகழ்த்த அமெரிக்கப் பல்கலைக் கழகங்களைத்தான் நாட வேண்டியிருந்தது. இதனால் பல்கலைக் கழகங்களில் ஆராய்ச்சித் திறன் பல மடங்கு பெருகியது. கல்வித் தரம் மளமளவென்று உயர்ந்தது.

சந்திரனை அடைவது என்ற இலட்சியம் புதிய புதிய கண்டுபிடிப்புக்களுக்கு உதவி இருக்கிறது. உதாரணமாக அப்பாலோவின் விண்வெளி வீரர்கள் அமரும் இடத்தைச் சுற்றி உள்ள சுவர் அலுமினியத் திரூல் ஆனது. இந்த அலுமினியம் சாதாரணமாக நாம் பார்க்கும் அலுமினியத்தை விட நாற்பது மடங்கு இலேசானது. ஆனால் அதே சமயம் நாற்பது மடங்கு அதிக உறுதி வாய்ந்தது! இது போன்ற புது ரகப் பொருள்கள் மொத்தம் 2,500 இதுவரை கண்டு பிடிக்கப் பட்டுள்ளன, விண்வெளிப் பயணத் திட்டம் காரணமாக. இவையெல்லாம் மனிதனின் அன்றாட வாழ்வுக்குப் பெரிதும் பயன்படக் கூடியவை.

தேவை எப்படி ஆராய்ச்சியை ஊக்குவிக்கிறது என்று பார்த்தோம். சந்திர மண்டலத்தில் மனிதன் வாழ்வது என்று தீர்மானமாகி விட்டால் தேவை அங்கும் ஆராய்ச்சியை ஊக்குவிக்கும் என எதிர்பார்க்கலாம். காற்று மண்டலமே இல்லாத சந்திரனில் விண்வெளி உடை இன்றி மனிதன் ஐந்து நிமிஷங்கள்கூட உயிர் வாழ முடியாது. எனினும், அங்குள்ள மலைகளைக் குடைந்து பெரிய பெரிய குகைகளை உண்டாக்கலாம் என்றும், அந்தக் குகைகளுக்குள் செயற்கையான முறையில் தயாரிக்கப்படும் பிராண வாயுவை நிரப்பி வாழலாம் என்றும் கருதப்படுகிறது. காற்று வெளியே போகாமல் குகையின் வாயில்களை மூடிய கதவுகள் காக்கும். அணுசக்தி தயாரிப்புக்கான மூலப் பொருள்கள் சந்திரனில் உண்டு என்றும், ஆகவே மின் சக்தி உருவாக்கிக் கொள்ள

○ சந்திர மண்டலத்தில் குடியிருப்பு

நன்றி: 'ஸ்பான்'

○ ஆர்தர் ஸி. க்ளார்க் என்ற விஞ்ஞானக் கதை எழுத்தாளரின் கற்பனையிலே உருவான கதை, '2001ம் ஆண்டில் விண்வெளி யாத்திரை' என்ற தலைப்பில் திரைப்படமாக வந்தது. எதிர்கால விண்கலத்தின் உட்புறத் தோற்றத்தைப் படத்தில் காண்கிறீர்கள்.



லாம் என்றும் நம்புகிறார்கள். அது இய லாது போனாலும் சூரிய ஒளியிலிருந்தே மின் சக்தி தயாரித்து அளிக்கும் பாட்டரிகளைப் பயன்படுத்தலாம். இவை 'ஸோலார் பாட்டரி'கள் எனப்படும்.

மின் சக்தி இருந்து விட்டால் பிறகு கேட்க வேண்டுமா ? தொழிலகங்கள் தோன்றி விடும் !

இவற்றில் முக்கியமானது உணவுத் தொழிற்சாலையாக இருக்கும். சந்திரனில் உள்ள பாறைகளிலிருந்து மூலப் பொருள்களை —பிராண வாயு, நைட்ரஜன், கார்பன், நீல வாயு, கந்தகம், பாஸ்பரஸ் போன்றவற்றை — பிரித்தெடுத்து, பிறகு இவற்றை மீண்டும் செயற்கை உணவுப் பொருள்களாக — புரதச் சத்து, கொழுப்புச் சத்து, சர்க்கரைச் சத்து ஆகியவையாக — ரசாயன சேர்க்கையில் தயாரிக்கலாம்.

சந்திரனில் சுரங்கங்கள் வெட்டி அடிவாரத்தில் உறைந்து கிடக்கும் பனிக்கட்டிகளைக் கொணர்ந்து உருக்கினால் தண்ணீர்த் தட்டுப்பாடும் இராது! செயற்கை ஒளியின் கீழ் சில தாவரங்களைப் பயிர் செய்யலாம்.

சந்திரனின் வாயு மண்டலமற்ற சூழ்நிலை சில விசேஷத் தயாரிப்புக்களுக்கு மிகவும் அனுகூலமாக இருக்கும் என்று கருதப்படுகிறது. உதாரணமாக, வாயுக்களின் கலப்படமின்றிப் பரிசுத்தமான உலோகங்களைத் தயாரிப்பது சாத்தியமாகும். செயற்கையான முறையில் பூமியில் வெற்றிடத்தை உருவாக்கி அங்கு விஞ்ஞானிகள் சில பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். சந்திரனிலோ மைல் கணக்கில் வெற்றிடம் காத்துக் கிடக்கிறது!

சந்திர மண்டலத்தில் பூமியில் காணக் கிடைக்காத சில புதிய கனிப் பொருள்கள் இருக்கலாம் என்றும் நம்பப்படுகிறது. அங்கிருந்து உபயோகமான கனிப் பொருள்களைப் பூமிக்குக் கொணருவதில் சிரமம் அதிகமில்லை. பூமியின் ஆகர்ஷண சக்தியும் அதைச் சுற்றி உள்ள வாயு மண்டலமும் இங்கிருந்து கிளம்பும் ராக்கெட்டுக்களுக்குத் தடையாக உள்ளன. ஆனால் சந்திரனிலிருந்து பூமிக்கு வருவது ஒப்பு நோக்குகையில் மிக எளிது.

விண்வெளியில் நிலவும் எடையற்ற சூழ்நிலையும் சில விசேஷமான தயாரிப்புகளுக்கு மிகவும் அனுகூலமாக இருக்கும் என விஞ்ஞானிகள் கருதுகின்றனர். காமிரா, தூரதரிசினி, மூக்குக் கண்ணாடி போன்றவற்றுக்குத் தேவைப்படும் மிக உயர்தரமான லென்சுகளும், நிலைக்கண்ணாடிகளும் நாற்றுக்கு நூறு சதவீதம் கச்சிதமான தரத்தில் தயாரிக்கலாம். பல ரக இயந்திரங்களிலும் பயன்படும் 'பால் பேரிங்' உருளைகளையும் அங்கு அணு அளவும் தாம் குன்றாது உருவாக்கலாம். இதனால் இவை இடம் பெறும் இயந்திரங்கள் நீடித்த உழைப்பை நல்கும்.

ரூஷ்யன் முதலில் ராக்கெட் ஒன்று விண்வெளிக்கு எடுத்துச் சென்ற பொருள் பம்ளிமாஸ் பழம் அளவினதாய்த்தான் இருந்தது. ஆனால் இன்று ஸாடர்ன் — 5 ராக்கெட் மூன்று லட்சம் ராத்தல் எடையுள்ள பொருளை விண்வெளிக்குச் செலுத்தவல்லது.

ஆகவே, எதிர்காலத்தில் உலகைச் சுற்றி வரும் விண்வெளி நிலையங்களும் அவற்றில் தொழிலகங்களும்கூட ஏற்படுவதில் தடை ஏதும் இல்லை. முயற்சி தேவை; அவ்வளவே !

ஏற்கெனவே சில நன்மைகள் சர்வ சாதாரணமாகி விட்டன. விண்வெளியில் உலகைச் சுற்றி வரும் தகவல் ஒலிபரப்பு செயற்கைச் சந்திரன்கள், வானிலை ஆராய்ச்சிக்கென அனுப்பப்பட்ட செயற்கைச் சந்திரன்கள் ஆகியவற்றின் பயனை எத்தனையோ நாடுகள் இன்று அன்றாடம் அனுபவித்து வருகின்றன. தகவல் ஒலிபரப்பு செயற்கைச் சந்திரன்கள் மூலம் உலக முழுவதிலும் உள்ள மக்களுக்கு எதிர்காலத்தில் முதல் வகுப்பு முதல் கல்லூரிப் படிப்பு வரை எல்லாப் பாடங்களையும் கற்றுக் கொடுப்பது சாத்தியமாகலாம்.

சந்திர மண்டலத்தை எந்த ஒரு நாடும் உரிமை கொண்டாடக் கூடாது என்றும் விஞ்ஞான முன்னேற்றத்துக்கு மட்டுமே வைத்துக் கொள்ள வேண்டும் என்றும், ராணுவ நடவடிக்கை ஏதும் அங்கு எடுக்கக் கூடாது என்றும் ஓர் உடன்படிக்கை சர்வதேச நாடுகளிடையே கையெழுத்தாகி இருக்கிறது.

சந்திரனில் பெரிய ரேடியோ டெலஸ்கோப்புக்களை நிறுவி எதிர்காலத்தில் விஞ்ஞானிகள் பிரபஞ்சத்தை ஆராய்வார்கள். பூமியிலிருந்து பார்க்கையில் உள்ள வாயு மண்டலத் திரை அம்புலியில் இடையூறாகையால் வான சாஸ்திர ஆராய்ச்சிகளில் பெரிய அளவு முன்னேற்றங்கள் நிகழும். பூமி, சந்திரன் இதர கோள்கள் தோன்றிய விதம் பற்றிப் புதிய தகவல்கள் சந்திரனுக்கு விஞ்ஞானிகள் சென்றால் கிடைக்கும்.

பலவீனமான இதயம் உள்ளவர்கள் சந்திர மண்டலத்தில் சுகமாக வாழலாம். ஏனெனில், அங்கு ஆகர்ஷண சக்தி குறைவானதால் சரீரத்துக்குச் சிரமம் ஏற்படுவதில்லை. ஆனால் சந்திரனைச் சென்றடையும் பயணத்தைத் தாங்குவது பலவீன இதயம் படைத்தவர்களுக்குச் சாத்தியமா என்பதுதான் சந்தேகம் !

அம்புலியைச் சென்றடைவது என்பது ஓர் ஆரம்ப கட்டம்தான். விண்வெளியின் தலைவாசல் என்றுதான் சந்திரனைக் கருதலாம். மனிதன் எதிர்காலத்தில் அம்புலிக்கும் அப்பால் போவான். அணுசக்தியைப் பயன்படுத்தும் விண்கலத்திலோ அல்லது சூரிய ஒளியையே சக்தியாக மாற்றிப் பயன்படுத்தும் விண் கலத்திலோ ஏறிச் செல்வான்.

நாம் இல்லாவிட்டாலும், அடுத்த தலைமுறையினர், செவ்வாய்க் கிரகத்தில் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி நிலையங்கள் அமைத்திருப்பதைக் காண்பார்கள். வருங்கால சந்ததியினர், விஞ்ஞானிகளின் அறிவாற்றலையும் விஞ்ஞான வளர்ச்சியையும் நினைத்து வியக்கும் அதே சமயத்தில் ஒரு நியதிக்குட்பட்ட உலகத்தின் இயக்கத்துக்கு மட்டுமல்ல, அண்டம், பேரண்டம், எல்லையற்ற பிரும்மாண்டம் இவற்றின் இயக்கத்துக்கே அதிபதியாக விளங்குபவனை எண்ணி அடக்கமும் பெறுவார்கள். — **குட்டிகிருஷ்ணன்**


BRITANNIA
MARIE
BRITANNIA
MARIE
BRITANNIA
MARIE



# சந்திரனில் ஒரு சிலந்தி

'சிலந்தி'யின் பல தோற்றங்கள்.

இதுவரை எந்த மனிதனும் அங்கு காலடி எடுத்து வைத்ததில்லை! நானூறு கோடி வருஷங்களாக சந்திரன் ஆகாயத்தில் இருந்து வந்திருக்கிறது என மதிப்பிடுகிறார்கள். எனினும் மனிதன் மட்டுமல்ல; வேறு எந்த ஜீவராசியுமே அங்கு இருந்ததில்லை. உயிருள்ள வஸ்து — ஒரு பாக்டீரியா கிருமிகூட அங்கு கிடையாதென்று நம்பப்படுகிறது.

இன்று அந்த நிலைமை மாறப் போகிறது. மூன்று விண்வெளி வீரர்களை அங்கு அழைத்துச் செல்லவிருக்கிறது ஒரு 'சிலந்தி'! ஆம். சிலந்தி என்றுதான் அந்த வாகனத்தைச் செல்லப் பெயரிட்டு அழைக்கிறார்கள். அதன் தோற்றமும் ஏறக்குறைய அப்படித்தான் இருக்கிறது. விண்வெளி வீரர் டேவிட் ஸ்காட் இந்தச் சிலந்தி வாகனத்தைப் பின் வருமாறு வர்ணித்தார்: ''உன்னை விடப் பெரிய சிலந்தியை நான் கண்டதில்லை; உன்னைவிட வேடிக்கையான சிலந்தியை நான் பார்த்ததில்லை; உன்னைப் போன்று ஏற்ற நண்பனாக விளங்கக்கூடிய வேறு ஒரு சிலந்தியும் கிடையாது!''

ஆம், சந்திர மண்டலத்தில் — முன் பின் தெரியாத, உயிர் வாழ்வதற்கு உகந்ததாய் இராத சூழ்நிலையில் — சென்று இறங்கப் போகும் இரு விண்வெளி வீரர்களுக்கும் வீடாக விளங்கி, நண்பனாகவும் திகழப் போவது இந்தச் சிலந்தி வாகனம்தான்.

பூமியிலிருந்து கிளம்பும்போது இந்தச் சிலந்தி வாகனம், ஸாடர்ன்-5 ராக்கெட்டின் மூன்றாவது கட்டத்தில் பாதுகாப்பான முறையில் பொருத்தி வைக்கப்பட்டிருக்கும். விண்வெளி வீரர்கள் மூவருமோ விண்கலத்தில் இருப்பார்கள்.

ஸாடர்ன்-5 ராக்கெட்டின் மூன்று கட்டங்களும் ஒன்றன் பின் ஒன்றாக இயங்கி விண்கலத்தை மிக உயரத்தில் கொணர்ந்து சேர்க்கும். மற்ற இரண்டு கட்டங்களும் எரிபொருள் தீர்ந்து கழன்றுகொள்ள ராக்கெட்டின் மூன்றாவது கட்டம் மட்டிலும் விண்கலத்துடன் உலகைச் சுற்றி வரும் (Orbit). அப்போது விண் வீரர்கள் எல்லாச் சாதனங்களையும் சரிபார்த்துக் கொள்வார்கள்.

பிறகு ராக்கெட்டின் மூன்றாவது கட்டம் இரண்டாவது தடவையாக இயங்கும். உடனே பூமியைச் சுற்றி வரும் வட்டப் பாதையிலிருந்து விலகி, பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டு, ராக்கெட்டும் விண்கலமும் சந்திர மண்டலத்தை நோக்கிப் பயணப்படும்.

இந்தத் தருணத்தில்தான் மிகவும் சிரமசாத்தியமான ஒரு காரியத்தை விண்வெளி வீரர்கள் செய்வார்கள். தாங்கள் உள்ள விண்கலத்தை ராக்கெட்டிலிருந்து தனியே பிரிப்பார்கள். பின்னர் வேகமாகச் சென்று கொண்டிருக்கையிலேயே விண்கலத்தை அரை வட்டமாக 'பல்டி' அடிக்கச் செய்வார்கள்.

ராக்கெட்டின் மூன்றாவது கட்டத்துக்குள்தான் சிலந்தி வாகனம் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தோம். 'பல்டி' அடித்த பிறகு விண்கலத்தின் கூரிய முனை ராக்கெட்டின் மூன்றாவது கட்டத்தை — அதனுள் இருக்கும் சிலந்தி வாகனத்தை — நோக்கியபடி இருக்கும். அப்படியே ராக்கெட்டை அணுகி விண்கலத்தின் கூரிய முனையுடன் சிலந்தி வாகனம் நன்கு பொருந்திக்கொள்ளச் செய்வார்கள். பிறகு சிலந்தி வாகனத்தை ராக்கெட்டிலிருந்து விடுவித்துக் கொள்வார்கள். விண்கலமும் சிலந்தி வாகன

மும் இணைப்பெற்றுச் சந்திரனை நோக்கி விரையும்! ராக்கெட்டின் மூன்றாவது கட்டம் விண்வெளியில் விடப்படும். இனி அதற்கு வேலை இல்லை!

இந்த விதமாக அப்பாலோ-11 சந்திர மண்டலத்தை நெருங்கி அதன் ஆகர்ஷண சக்தியால் பாதிக்கப்பட்டுச் சந்திர மண்டலத்தைச் சுற்றி வரும். விண்வெளி வீரர்கள் மீண்டும் மிகச் சாமர்த்தியமாகச் செயல்பட வேண்டிய தருணம் இப்போது வந்து விட்டது. சந்திரனில் இறங்கப் போகும் ஆர்ம்ஸ்ட்ராங்கும், ஆல்டிரினும் விண்கலத்திலிருந்து ஒரு குகை போன்ற அமைப்பு வழியாகச் சிலந்தி வாகனத்துக்குள் நுழைவார்கள். சிலந்தி வாகனத்தை விண் கலத்திலிருந்து பிரிப்பார்கள். இரண்டு வாகனங்களும் இப்போது சந்திரனைத் தனித்தனியே சுற்றி வரும்.

மூன்றாவது நபரான காலின்ஸ் தாய்க் கலத்தைச் சந்திரனைச் சுற்றி வருமாறு



கவனித்துக் கொள்ளச் சிலந்தி வாகனத்தில் உள்ள மற்ற இருவரும் சந்திரனில் இறங்க முற்படுவார்கள். சந்திரனில் இறங்குவதற்கான விசைகளை இயக்குவார்கள்.

## சந்திரனில் நிகழ்வது :

சிலந்தி வாகனம் சந்திரனில் இறங்கிய பிறகு உடனே கதவைத் திறந்து கொண்டு இருவரும் வெளியே வந்து விடவில்லை. வாகனத்தில் உள்ள இரு சிறிய முக்கோண வடிவ ஜன்னல்கள் வழியே சந்திரனின் மேற் பரப்பைப் பார்ப்பதுடன், அப்போதைக்குத் திருப்தி அடைகிறார்கள். ஏனெனில் சந்திரனில் பத்திரமாக இறங்கிப் பதினைந்து மணி நேரத்துக்குப் பிறகுதான் அதன் மேல் பரப்பில் அடியெடுத்து வைக்கலாம் என்று அவர்களுக்கு உத்தரவு! இறங்கிய வேகத்தில் வாகனத்துக்கு ஏதாவது தீங்கு நேர்ந்திருக்கிறதா என்பதை முதலில் அவர்கள் சோதித்துப் பார்க்கிறார்கள். பிறகு அமைதியாகச் சாப்பிட்டுவிட்டு எட்டு மணி நேரம் நிம்மதியாகத் தூங்குகிறார்கள். அதன் பின்னர்தான் அவர்கள் சந்திரனில் காலடி எடுத்து வைக்க முற்படுகிறார்கள்.

உண்டு உறங்கி முடிந்தபிறகு விண்வெளி உடை தரிக்கிறார்கள். தொலைவில் 70 மைல் உயரத்தில் சந்திரனைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் தாய்க் கலத்தில் உள்ள காலின்ஸுடன் பேசுகிறார்கள். பூமியில் உள்ள விஞ்ஞானிகளுடன் தொடர்பு கொள்கிறார்கள். ''இறங்கலாம்'' என்று உத்தரவு கிடைத்ததும் சிலந்தி வாகனத்தின் கதவைத் திறக்கிறார்கள். வாசலில் நுழைந்து சின்னஞ்சிறிய 'வராந்தா'வில் நிற்கிறார் ஆர்ம்ஸ்ட்ராங்.

சந்திர மண்டலத்தின் மேல் பரப்பை அதன் மேலிருந்தபடியே முதன் முதலாக மனிதக் கண்கள் பார்க்கின்றன!

உலகத்தில் கோடானு கோடி மக்கள் ஆர்வத்தோடு டெலிவிஷன் அல்லது ரேடியோவின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள். விநாடிக்கு விநாடி ஆவல் குறுகுறுப்பு அதிகரிக்க, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அந்த மகத்தான செய்தியை எதிர்பார்த்துத் துடிப்புடன் காத்திருக்கிறார்கள்.

கனவு நிஜமாகும் தருணம் நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. யுகம் யுகமாக நடக்காத ஒரு காரியம் நடக்கவிருக்கிறது. விஞ்ஞான அற்புதங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்ற ஒரு சம்பவம் கண்ணுக்கு மெய்யாக நிகழவிருக்கிறது!

ஆர்ம்ஸ்ட்ராங், சிலந்தி வாகனத்திலிருந்து நீண்டுகொள்ளும் ஓர் ஏணி வழியாக மெல்லக் கீழே இறங்குகிறார்.

இரண்டு லட்சத்து ஐம்பதாயிரம் மைல்களுக்கு அப்பால் உலகில் உள்ள மக்களின் இதயத் துடிப்பு அதிகரிக்கிறது!

விண்வெளி வீரர் கடைசிப்படியில் இறங்கிக் கனமான பூட்ஸ் அணிந்த காலை சந்திர மண்டலத்தின் மேல் பரப்பில் வைக்கிறார். மற்றொரு காலையும் சந்திரன் மேல் ஊன்றுகிறார்.





முன் பக்கம்: 1. அ:ஆ:இ: மூன்றாவது கட்ட ராக்கெட்டிலிருந்து சந்திர வாகனம் விண்கலத்துடன் இணைந்து பிரிக்கப்படுகிறது. 2, 3. சந்திரனில் நடக்கும்போது சந்திர மண்டலத் துகள்களைத் தோண்டி எடுப்பதற்கான பயிற்சி பூமியிலேயே நடக்கிறது. அருகில் சந்திர வாகனம். 4. அ: ஆ: விண்கலத்திலிருந்து விடுபட்டுச் சந்திர வாகனம் நிலாவில் இறங்கப் போகிறது.

---

மனிதன் சந்திரனை வெற்றி கொண்டாகி விட்டது! உலகில் பல்லாயிரக் கணக்கான மக்களின் கண்டங்களிலிருந்து வாழ்த்தொலிகள் விண்ணதிர எழுகின்றன.

ஆர்ம்ஸ்ட்ராங் மேலே பார்க்கிறார். அங்கு ஆல்டிரின் கீழே இறங்க ஆயத்தமாக நிற்கிறார். இருவரும் அண்ணாந்து நோக்குகிறார்கள். தொலைவில் அரை வட்டமாகப் பூமி தெரிகிறது. ஒரு பாதி சூரிய ஒளி பட்டு ஒளிர்கிறது. மற்றொரு பாதி இருண்டு கிடக்கிறது. உயரே சூரியன் பிரகாசிக்கிறான். வாயு மண்டலம் இல்லாத காரணத்தால் சந்திரனைச் சூரிய கிரணங்கள் கடுமையாகத் தாக்குகின்றன. ஆனால் விண்வெளி உடை, வீரர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

சந்திர மண்டலத்தில் விண்வெளி வீரர் நடக்க ஆரம்பிக்கிறார். பூமியில் நடப்பது போல் அங்கு நடக்க முடியாது. இலேசாக எம்பி எம்பிக் குதித்து முன்னேற வேண்டியதுதான். ஆர்ம்ஸ்ட்ராங் இதை பூமியிலேயே எத்தனையோ முறைசெய்து பழகியிருப்பதால் இப்போது சுலபமாக இருக்கிறது. சந்திரனில் இருக்கும் ஒவ்வொரு மணி நேரத்துக்கும் மூன்று மணி நேரம் என்ற விகிதத்தில் அவர் பூமியிலேயே செயற்கையாகச் சிருஷ்டிக்கப் பட்ட சந்திர மண்டலச் சூழ்நிலையில் ஒத்திகை பார்த்துப் பழகி யிருக்கிறார். இது விண்வெளி வீரராவதற்கு அவர் பெறும் எத்தனையோ பயிற்சிகளில் — பாட திட்டங்களில் ஒரு சிறு பகுதிதான்.

அவருடைய எடை 165 பவுண்டு: அவர் அணிந்திருக்கும் விண்வெளி உடையின் எடை 54 பவுண்டு: அவர் முதுகில் தூக்கிச் செல்லும் பிராணவாயு அடங்கிய கலத்தின் எடை 120 பவுண்டு. இத்தனையும் சேர்ந்து சந்திரனில் எடை 57 பவுண்டு தான்! இந்த வித்தியாசம் காரணமாக வழக்கம்போல் அவர் நடந்தால் தடுமாறி விழுந்துவிடலாம். ஆகவேதான் மெல்லக் குதித்து முன்னேறுகிறார்.

சீக்கிரமே அவரும் அவரது தோழரும் அமெரிக்கக் கொடி ஒன்றை சந்திரனில் நடுகிறார்கள். வாயு மண்டலம் இல்லாத நிலையில் அது பறக்காது என்பதால் நாலா பக்கமும் 'ஸ்பிரிங்' கம்பிகள் கொடியை இழுத்துப் பிடித்து நீண்டிருக்கச் செய்கின்றன. அடுத்தாற்போல் சந்திர மண்டலத்திலிருந்து சில பாறைகளைப் பூமிக்குக் கொண்டு வரச் சேகரிக்கிறார்கள். விஞ்ஞா





ளக் கருவிகள் சிலவற்றைச் சந்திர மண்டலத்தில் நிறுவுகிறார்கள். புகைப்படங்கள் எடுக்கிறார்கள். சினிமா, டெலிவிஷன் காமிராக்களை இயக்குகிறார்கள்.

ஆல்ட்ரினும் ஆர்ம்ஸ்ட்ராங்கும் சந்திரனில் தன்னந்தனியாக இருந்த போதிலும் பூமியில் லட்சோப லட்சம் மக்கள் அவர்களுடனேயே இருக்கும் உணர்வை டெலிவிஷன் மூலம் பெறுகிறார்கள். அவர்களுடைய தலையை மூடியிருக்கும் ஹெல்மெட்டுக்குள் நுண்ணிய 'மைக்ரோபோன்'கள் உள்ளன. சிறிய ஒலிபரப்பு சாதனங்களை அவர்கள் முதுகில் சுமந்து கொண்டிருக்கிறார்கள். சிலந்தி வாகனத்திலும் ஒலிபரப்புக் கருவிகள் உண்டு. அவர்களது ஒவ்வொரு வார்த்தையும் உடனுக்குடன் பூமியில் எல்லா மக்களும் கேட்க ஒலிபரப்பாகிறது. டெலிவிஷன் காமிராவை அவர்கள் இயக்க ஆரம்பித்ததும் உடனுக்குடன் அந்தக் காட்சிகள் உலகின் பல பாகங்களிலும் டெலிவிஷன் உள்ள இல்லங்களிலெல்லாம் தெரிகிறது. இதற்கு, ஒலிபரப்புச் சாதனங்களுடன் உலகைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் செயற்கைச் சந்திரன்கள் துணை புரிகின்றன.

சந்திரனில் இருபத்தி இரண்டு மணி நேரம் வசித்த பிறகு விண்வெளி வீரர் இருவரும் மீண்டும் சிலந்தி வாகனத்தில் ஏறிக்கொள்கிறார்கள்.

விசைகளை முடுக்கியதும் சிறியதொரு ராக்கெட் இயங்க ஆரம்பித்து வாகனத்தை உயரே கிளப்புகிறது. உயரே கிளம்பிப் போய் சந்திரனைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் தாய்க்கலத்துடன் இணைந்து கொள்ளுகிறது சிலந்தி வாகனம்.

விண்வெளி வீரர்கள் இருவரும் மறுபடியும் சிலந்தி வாகனத்திலிருந்து விண் கலத்துக்குக் குறுகிய குகை போன்ற அமைப்பு வழியாக ஊர்ந்து வந்து சேர்கிறார்கள். விண்கலத்துக்குள் அவர்களை காலின்ஸ் வரவேற்கிறார். இனி சிலந்தி வாகனத்தைத் தேவையில்லை என்பதால் பிரித்து விட்டு விடுகிறார்கள். அது தன்பாட்டுக்கு இயற்கை நியதி காரணமாக சந்திரனை ஒரு வட்டப் பாதையில் சுற்றி வந்து கொண்டிருக்கும். விண்கலத்தில் உள்ள மூவரும் அதில் உள்ள ராக்கெட் இஞ்சினைச் சரியான தருணத்தில் இயக்குகிறார்கள். சந்திரனின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டு பூமியை நோக்கிக் கலம் விரைகிறது.....

❖ ❖ ❖

சந்திரனைச் சென்றடைவதிலும் திரும்புவதிலும் பலப்பல கட்டங்கள் இருக்கின்றன.

விஞ்ஞான அறிவு இத்தனை கட்டங்களையும் தாண்டிச் சந்திரனை நெருங்கி விட்டது. இல்லை..... சந்திரனை உலக மக்களுக்கு அருகே கைக்கெட்டும் தூரத்தில் கொணர்ந்து சேர்த்திருக்கிறது!

— குமரன்

---

## பயணம் முடிந்து பாருக்குத் திரும்பும்போது......

சந்திரனில் இறங்கிச் சரித்திரப் புகழ் பெறப்போகும் விண்வெளி வீரர்கள் அந்தப் பணி முடிந்ததும் மீண்டும் விண்கலத்தை அடைந்து அதன் வேகத்தை மணிக்கு 5460 மைல்களாக அதிகரிப்பார்கள். இந்த வேகத்தில் சந்திரனின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டு விண்கலம் பூமி நோக்கித் திரும்பும். இந்த விண் கலத்திலும் இரு பகுதிகள் உண்டு. பூமியைச் சுற்றி உள்ள வாயு மண்டல எல்லையை நெருங்குவதற்குச் சற்று முன்னால் விண்கலத்தின் இனி தேவையற்ற ஒரு பகுதியைப் பிரித்து விட்டுவிடுவார்கள் விண்வெளி வீரர்கள். அவர்கள் அமர்ந்துள்ள பகுதி மட்டிலும் மணிக்கு 25,000 மைல் வேகத்தில் பூமியை நெருங்கும். வாயு மண்டலத்தைக் கிழித்துக்கொண்டு இந்த வேகத்தில் இறங்கும்போது விண்கலம் அந்த உராய்வு காரணமாக உஷ்ணமடைந்து எரிந்து சாம்பராகி விடலாம். அப்படி நேராதிருக்க விண் கலத்தைச் சுற்றி வெப்பத் தடுப்புக் கேடயம் உண்டு. வெளியே 5000 டிகிரி பாரன்ஹீட் உஷ்ணத்தில் கலம் பழுக்கக் காய்ச்சியது போலானாலும் கலத்தின் உள்ளே விண் வீரர்கள் உள்ள அறை குளுமையாகவே (80° F) இருக்கும்! பூமியிலிருந்து 24,000 அடி உயரத்தில் இருக்கும்போது இரு பாராசூட்டுகள் விரிந்து கொடுத்துக் கலத்தின் வேகத்தைத் தணிக்கும். 10,000 அடி உயரத்தில் மேலும் மூன்று பாராசூட்டுகள் விரிந்து கொடுக்க விண்கலம் அதிக அதிர்ச்சியின்றி பசிபிக் மகா சமுத்திரத்தில் விழும். பூமியிலிருந்தபடியே அம்புலிப் பயணத்தின் ஒவ்வொரு விநாடியும் கண்காணித்து வரும் விஞ்ஞானிகளுக்கு பசிபிக் கடலின் எந்த இடத்தில் கலம் விழும் என்பது தெரியாமலா போகும்? ஹெலிகாப்டர்கள் தயாராக வட்ட மிட்டபடி காத்திருக்கும், விண்வீரர்களை அருகில் உள்ள போர்க் கப்பலுக்குக் கொண்டு சேர்க்க!

விண்வெளிக்குப் பயணமாவது 36 மாடிக் கட்டிடத்தின் உயரமுள்ள ஸாடர்ன் - 5 ராக்கெட்தான் என்றாலும் திரும்பி வரும்போது எஞ்சுவது 11 அடி 5 அங்குலம் உயரமுள்ள விண்கலம் மட்டுமே! அதிலிருந்த மூன்று விண்வெளி வீரர்களும் ஹெலிகாப்டரில் ஏறிக் கப்பலுக்குப் போய்விட்டார்கள். மாலுமிகள் விண்கலத்தைப் படகில் இருந்தபடி பாதுகாத்து வருகிறார்கள்.








1. விண்வெளிப் பயணம் தொடங்குமிடத்துக்கு சாடர்ன் - 5 ராக்கெட் கொண்டு செல்லப் படுகிறது.

2. "ப்ளாக் ஹவுஸ்" அறையில் ராக்கெட் கிளம்புவதைக் கண்காணிக்கின்றனர். பெரிஸ் கோப் கருவி மூலம் பார்ப்பவர்களில் வலதுபுறம் டாக்டர் வெர்னர் வான் ப்ரௌன். ★

ஜூலை 16ந் தேதியன்று அமெரிக்க விண்வெளி வீரர்கள் விண்வெளிப் பயணத்தைத் தொடங்கி, அவர்களில் இருவர், ஜூலை 21ம் தேதியன்று சந்திரனின் நிலப்பகுதியில் இறங்கி அங்கு 22 மணி நேரம் தங்கித் திரும்புவர்.

இவ்வாறு சந்திரனை அடையும் முயற்சிக்கு அப்பாலோ-11 என்று நாமகரணம் செய்திருக்கிறார்கள். அப்பாலோ என்பது சக்தி வாய்ந்த கிரேக்கக் கடவுளின் பெயராகும். அமெரிக்க விண்வெளி வீரர்கள் மூவரும் சந்திரனுக்குப் பிரயாணம் செய்து திரும்பப் பயன்படும் விண்கலமும் அதே பெயரால் அழைக்கப்படுகிறது.

விண்கலத்தை விண்வெளிக்கு எடுத்துச் செல்ல ஸாடர்ன்-5 என்ற பிரும்மாண்டமான (ஏவுகணை) ராக்கெட் உபயோகப்படுத்தப்படுகிறது. ஏவுகணையை முதன் முதலில் கண்டு பிடித்த பெருமை ட்ஸியோகோவ்ஸ்கி (Tsiokovsky) என்ற ருஷிய விஞ்ஞானியைச் சாரும். அதை யடுத்து அமெரிக்காவின் மாஸாசூஸெட்ஸ் மாநிலத்தின் கிளார்க் சர்வ கலாசாலையில் பௌதிகப் பேராசிரியராக இருந்த டாக்டர் ராபர்ட் எச். கோடர்டு (Robert H. Goddard) நிரம்ப ஆராய்ச்சிகளைப் புரிந்தார் இத்துறையில். கடந்த 1926ம் ஆண்டு பெட்ரோல், திரவ ரூபத்திலான பிராணவாயு, இவ்விரண்டையும் உபயோகித்து ஓர் ஏவுகணையை இரண்டரை விநாடியில் 184 அடி தூரம் அனுப்பி வெற்றி கண்டார்.

நாம் ஒரு பந்தை மேலே எறியும்போது பந்து உயரே செல்லச் செல்ல அதன் வேகம் குறைகிறது. கடைசியில் அதன் வேகம் பூமியின் ஆகர்ஷண சக்திக்குச் சமமாகி, பின் அதை விடக் குறைந்து, அந்தச் சக்தியால் கீழ் நோக்கி இழுக்கப்பட்டுப் பந்து கீழே விழ ஆரம்பிக்கிறது. பூமியின் இந்த ஆகர்ஷண சக்தியை எதிர்த்து மூன்று விண்வெளிப் பயணிகளைத் தாங்கிய 59 அடி உயரமுள்ள விண்கலத்தை உயரே உந்தித் தள்ளிச் சந்திரனை நோக்கிய பாதையில் அனுப்புவதற்கு மாபெரும் சக்தி வாய்ந்த ஒரு ராக்கெட் தேவை. அத் தேவையைப் பூர்த்தி செய்யும் பணியில் வெற்றி கண்டவர் டாக்டர் வெர்னர் வான் ப்ரோன் (Dr. Wernher Von Braun) என்ற அமெரிக்க விஞ்ஞானியாவார். அவரது முயற்சியின் பலனாக 'ஸாடர்ன்-5' என்ற ராக்கெட் தோன்றியது.

36 மாடி கட்டிட உயரமுள்ள (282 அடி) ஸாடர்ன்-5 ராக்கெட், 62 லட்சம் பவுண்டு எடையுள்ளது. அது உருவாக்கும் சக்தி மொத்தம் 543 ஜெட் ஆகாய விமானங்களின் சக்திக்குச் சமமாகும்! இச்சக்தியைக் கொண்டு ஒரு மோட்டாரை 60 மைல் வேகத்தில் 34 ஆண்டுகள் ஓட்ட முடியும்! இதில் திரவ ரூபத்திலான பிராண வாயு, ஜலவாயு (Hydrogen) மண்ணெண்ணெய் முதலிய எரிபொருள்கள் உபயோகிக்கப்படுகின்

றன. இந்த எரிபொருள்களின் எடை ராக்கெட்டின் மொத்த எடையில் 92 சதவிகிதமாகும்! ராக்கெட்டில் இந்த எரிபொருள்கள் நிரம்பியிருக்கும் தொட்டிகள் இதுவரை மனிதனால் உருவாக்கப்படாத விசேஷத் தயாரிப்புக்கள். காற்றுப் புகாத அறைகள் என்பதோடு அணு அளவும் ஒழுகாது. இந்தத் தொட்டிகளின் விசேஷத் தன்மையை, சிறப்பை உணர ஓர் உதாரணம்: இந்தத் தொட்டிகளுள் ஒன்றில் பனிக் கட்டி நிரப்பி அத் தொட்டியை 70 டிகிரி வெப்ப நிலையுள்ள ஓர் அறையில் வைத்தால் அப்பனிக்கட்டி உருக எட்டரை வருடங்கள் பிடிக்கும்!

ஸாடர்ன்-5 ராக்கெட் ஒன்றின்மேல் ஒன்றாகப் பொருத்தப்பட்ட மூன்று பகுதிகளைக் கொண்டது. மூன்றாவது கட்டத்தின் உச்சியில் 59 அடி உயரமுள்ள மூன்று பகுதிகளைக் கொண்ட அப்பாலோ விண்கலம் பொருத்தப்பட்டிருக்கும்.

இந்த மாபெரும் ராக்கெட்டைச் செலுத்துவதற்கு என்று பிரத்தியேக ராக்கெட் தளம் (Launching Pad) ஃப்ளோரிடா மாநிலத்தில் கேப் கென்னடி என்ற இடத்தில் உள்ளது.

பாதி அளவு இருக்கிறதென்றால் அது எவ்வளவு பிரும்மாண்டமானது என யூகித்துக் கொள்ளலாம்.

ஸாடர்ன்-5 ராக்கெட்டைத் தாங்கிய இந்த வண்டி செல்வதற்கென 7 அடி கனமுள்ள— அவ்வளவு உறுதியான — வீதிகள் மூன்றரை மைல் தூரத்துக்குப் போடப்பட்டுள்ளன. ராக்கெட்டைத் தாங்கிய அந்த வண்டி செல்லும் வேகம் மணிக்கு ஒரு மைல்!

ஸாடர்ன்-5, விண்வெளிப் பாதையில் அப்பாலோ கலத்தைச் செலுத்த மொத்தம் 59 லட்சம் பவுண்டு எடையுள்ள மண்ணெண்ணெய், திரவ ரூபத்திலான பிராணவாயு, ஜலவாயு ஆகிய மூன்று எரிபொருள்களை உபயோகிக்கிறது.

ஸாடர்ன்-5ன் மூன்று பகுதிகளும் ஒன்றையடுத்து ஒன்றாக இயங்குகின்றன. இவ்வாறு இயங்குவதற்குக் காரணம் உண்டு. அதற்கு உதாரணம் ஒன்றைக் கூறலாம். ஒரு புகைரயில் வண்டி நிலக்கரி நிறைந்த 3 பெட்டிகளை இழுத்துக் கொண்டு செல்வதாக வைத்துக் கொள்வோம். அது நிலக்கரிப்





அங்கு கட்டப்பட்டிருக்கும் சந்திர நிலையம் (Moon Port) என்ற 525 அடி உயரமுள்ள கட்டிடம் ஸாடர்ன் ராக்கெட்டை இணைத்துத் தயாரிக்கும் இடமாக இருந்து உதவுகிறது. ஸாடர்ன் ஏவுகணையை உருவாக்கிய இடத்திலிருந்து ஏவுகணைத் தளத்துக்கு எடுத்துச் செல்லப் பிரும்மாண்டமான வண்டி ஒன்று உபயோகிக்கப்படுகிறது. 60 லட்சம் பவுண்டுகள் எடையுள்ள இந்த வண்டியின் மேல் தளம் ஒரு கால்பந்து மைதானத்தில்

பெட்டிகள் மூன்றும் காலியாகும்வரை நிலக்கரியை உபயோகித்து ஓடிக் கொண்டிருந்தால் சுமார் 500 மைல்கள்

□

டாக்டர் வெர்னர் வான் ப்ரோன்.

ராபர்ட் எச். கோடர்டு.

ராக்கெட், தளத்துக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. தூரத்தில் தெரிவது ''சந்திர நிலையம்''.

ஓடும். அதே புகை வண்டி ஒவ்வொரு பெட்டியின் நிலக்கரி தீர்ந்தவுடன் அப் பெட்டியைக் கழற்றி விட்டு ஓடிக் கொண்டிருந்தால் அது மொத்தம் 900 மைல்கள் ஓட முடியும்!

ஸாடர்ன்-5ன் அடிவார, முதல் பகுதியின் ஐந்து F-1 இன்ஜின்களும் செகண்ட் ஒன்றுக்கு 29,000 பவுண்டு எரிபொருளை எரித்து 77 லட்சம் பவுண்டுகள் உந்து விசையுடன் (Thrust) ராக்கெட்டை விண்கலத்துடன் தளத்திலிருந்து எழுப்பி, பூமிக்கு மேல் 38 மைல் தூரம் எடுத்துச் செல்லும். இதற்குப் பிடிக்கும் நேரம் இரண்டரை நிமிடமே! இப்படிச் செல்லும்போது அதன் வேகம் மணிக்கு 6000 மைல்களாகும்! பின் முதல் பகுதி ஏவுகணையிலிருந்து பிரிந்து கீழே விழும்.

பின் இரண்டாவது பகுதி இயங்கத் தொடங்கும். அதன் ஐந்து J-2 இன்ஜின்களும் ஆறரை நிமிட நேரம் இயங்கி, 11 லட்சம் பவுண்டு உந்து விசையினால் ராக்கெட்டின் எஞ்சிய பாகத்தை 114 மைல் உயரத்துக்கு உந்தித் தள்ளி, அதன் வேகத்தை 14,000 மைல்களாக அதிகரிக்கச் செய்கிறது. பிறகு இரண்டாவது பகுதியும் பிரிந்து விடுகிறது.

இதற்குள் விண்கலமும் ஏவுகணையின் மூன்றாவது பகுதியும் வாயு மண்டலத்தின் மெல்லிய மேல் பாகத்தை அடைந்து விடுகின்றன.

பின் ஏவுகணையின் மூன்றாவது பகுதி இயங்கத் தொடங்கும். 58.5 அடி நீளமுள்ள இப்பகுதியின் ஒரே இன்ஜின் இயங்கி விண்கலத்தின் வேகத்தை மணிக்கு 17.500 மைல்களாக அதிகரிக்கிறது. இவ்வாறு சுமார் இரண்டரை நிமிட நேரம் இயங்கியவுடன் இன்ஜின் இயங்குவது நின்றுவிடும். இச்சமயம் விண்கலம் பூமியைச் சுற்றிய வளையப் பாதையில் செல்ல ஆரம்பித்து, 90 நிமிடங்களுக்கு ஒரு முறை பூமியைச் சுற்றி வரும் (Orbit). இவ்வாறு ஒரு முறை சுற்றி வந்தவுடன் ராக்கெட்டின் மூன்றாவது பகுதியின் இன்ஜின் மறுபடியும் ஐந்தரை நிமிட நேரம் இயங்கி விண்கலத்தின் வேகத்தை மணிக்கு 24,250 மைல்களாக அதிகரிக்கச் செய்கிறது. இதன் காரணமாக அப்பாலோ விண்கலம் பூமியின்



ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டுச் சந்திரனை நோக்கித் தன் பயணத்தைத் தொடங்க வழி செய்கிறது.

அப்பாலோ விண்கலத்தைத் தாங்கிய ஸாடர்ன்-5 ராக்கெட் கிளம்புவதைக் கண்காணித்து மேற்பார்வையிடப் பல இஞ்சினீயர்கள் கொண்ட குழு பணி புரிகிறது. விண்வெளிப் பயணிகள் மூவரும் ராக்கெட்டில் கிளம்புவதற்கு 2 மணி 40 நிமிடங்களுக்கு முன் அப்பாலோ கலத்துக்குள் தம் இடங்களில் அமர்ந்தவுடன் கலத்தின் கதவு தாளிடப்படுகிறது.

ராக்கெட் தளத்துக்குச் சற்றுத் தொலைவில் பூமிக்கடியில் கட்டப்பட்டிருக்கும் ''ப்ளாக் ஹவுஸ்'' (Block House) என்ற மாபெரும் அறையில் இஞ்சினீயர்கள் இருந்து கொண்டு விண்வெளிப் பயணிகளுடன் காதில் அணிந்த தொலை பேசிகளின் மூலமாகவும் மற்றும் பல கருவிகள் மூலமாகவும் தொடர்பு கொண்டு விண் கலத்தின் பலவித விசைகள் இயங்குவதைச் சரிபார்த்துக் கொள்வர். ராக்கெட் கிளம்புவதை அவர்கள் பெரிஸ்கோப் என்ற கருவியை உபயோகித்தும் டெலிவிஷன் திரைகளிலும் பார்த்துக்கொள்வர்.

அப்பாலோ பயணம் தொடங்குவதை, பத்திரிகைப் பிரதிநிதிகள் முதலான மற்றவர்கள் ராக்கெட் தளத்துக்கு மூன்று மைல் தொலைவிலிருந்துதான் பார்க்க அனுமதிக்கப்படுவர். காரணம், பிரும்மாண்டமான ஸாடர்ன்-5 ராக்கெட் பேரிரைச்சலுடன் நெருப்பைக் கக்கிக் கொண்டு கிளம்புவது தான். அருகில் நின்றால் காதுகளுக்கும் கண்களுக்கும் தீங்கு நேரும்.

ராக்கெட்டுடன் சென்று விண்வெளியில் பூமியைச் சுற்றி வரும் விண்கலத்திலுள்ள பயணிகளுடன் தொடர்பு கொள்வதற்கென உலகத்தின் பல இடங்களில் கண்காணிப்பு நிலையங்கள் இயங்கி வருகின்றன. இவற்றில் ஐந்து அமெரிக்காவிலும், பத்து நிலையங்கள் ஆஸ்திரேலியா, ஸ்பெயின் முதலிய தேசங்களிலும் உள்ளன. தவிர நான்கு கப்பல்களிலும் எட்டு ஆகாய விமானங்களிலும் கண்காணிப்பு நிலையங்கள் இயங்கி வருகின்றன.

விண்வெளிப் பயணிகள் இவற்றுள் ஏதாவது ஒரு நிலையத்துடன் சதா தொடர்பு வைத்துக் கொண்டே யிருப்பர். ஒவ்வொரு விநாடியும் பயணிகளின் உடல்நிலை, கலத்தின் வேகம், அது இருக்கும் இடம், அதற்குள் உள்ள வெப்ப நிலை முதலிய பல புள்ளி விவரங்களையும் இந்த நிலையங்கள் கண்காணித்து வரும்.

— 'ராஜி'

## — — — — — பாதுகையின் பவனி — — — — —

மின் நிலைய மன மகிழ் மன்றம் மேடையேற்றிய இந்த நாடகம் புராணம் தழுவியதாக இருக்குமோ என்று எண்ணுபவர்களுக்கு ஏமாற்றம் காத்திருக்கும். சரித்திரம் தழுவியதாக இருக்குமோ என்று எண்ணுபவர்களுக்கு இதுபோன்ற சரித்திரத்தை எங்கே படித்தோம் என்ற சந்தேகம் எழும்.

சரித்திரத்துக்கும் புராணத்துக்கும் ஆதாரம் தேடாமல், கதையையும் நாடக அமைப்பையும் மட்டுமே காண முயன்றால், மன மகிழ்வு ஏற்படும். இப்படி ஒரு சிறந்த கற்பனையை - ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்கு வழி காணும் முயற்சியை ஔரங்க சேப்பும் சிவாஜியும் நினைவாக்கியிருந்தால், நம் நாட்டின் நிலைமை எப்படி உயர்ந்திருக்கும் என்



பதைக் கற்பனைக் கண்கொண்டு நோக்குகிறார் நாடக ஆசிரியர் ஸ்ரீ 'அகஸ்தியா'.

அசுவமேத யாகத்துக்குக் குதிரையை விடுவது போல, ஔரங்கசேப் தமது பாதுகையைப் பவனி வரவிடுகிறார். அந்தப் பாதுகையோடு புறப்படும் மதகுரு உண்மையில் உயிரைக் கொடுத்து நாடகத்துக்கு உயிரைக் கொடுக்கிறார். மத குருவின் பாத்திரமேற்று நடிக்கும் திரு அருமைநாதன் பெயருக்கேற்ப அருமையாகவே நடித்திருக்கிறார்.

சத்ரபதி சிவாஜியாகத் தோன்றும் திரு கதிர்வேலனுக்கு வேஷப் பொருத்தம் மட்டும் கைகொடுக்கவில்லை; அநாயாசமான நடிப்பும் கைகொடுத்து உதவுகிறது.

அவரது மந்திரி நாகோஜியாக வரும் திரு சடையப்பன், நடிப்பார்வம் காரணமாகத் தாம் நடிகர் என்பதைக் காட்டி விடுகிறார். நடிப்பிலே அடக்கத்தைக் காட்டியிருந்தால், அவர் நடிப்பு மெருகுற்று விளங்கியிருக்கும்.

ஔரங்கசேப்பாக வரும் டி. சம்பந்தம் அவர்களுக்கு வேஷப்பொருத்தம்இருந்தாலும்,அவசரத்தில் வசனங்களைக் கோட்டை விட்டதால் வேஷம் கலைந்தது!

அலீனாக - மதகுருவின் மகளாக வரும் திரு வி. எஸ். சுப்பிரமணியனும் நடிப்பால் உயர்ந்து, ஏற்றுக் கொண்ட பாத்திரத்துக்கு நியாயம் வழங்குகிறார். ஸரீனா கதைக்குத் தேவையில்லாத பாத்திரம்.

இந்த நாடகத்தில் பங்கு கொண்ட அனைவருமே மின் நிலைய ஊழியர்கள், - பின்னணி இசை முதற்கொண்டு புகைப்படக்காரர் வரை.

பின்னணி இசை இத்தனை முன்னணிக்கு வர வேண்டுமா என்று கேட்கத் தோன்றியது.

வடமொழிச் சொற்களைத் தவிர்த்து, சில பாத்திரங்களுக்கேற்ப வசனங்களையும் மாற்றினால், நாடகம் பாங்கு மிளிரும். வசனங்களில் சில திரும்பத் திரும்ப வந்து தம் மதிப்பை இழந்தன. நாடகம் மேடையில் மேலும் சிறக்க வேண்டுமானால் 'மேலும் மேலும்' என்ற சொற்களை மேலும் மேலும் குறைக்க வேண்டும். 'அதுதான் வழி'; 'அதுதான் வழி!'

— ர. வீ.

# சரித்திர நாயகர்கள்




சந்திர நிலப்பரப்பில் வந்திறங்கிய வாகனமும் விண்வெளி வீரரும். ஒருவர் ஏணி வழியே இறங்கிக் கொண்டிருக்கிறார். உயரே தெரிவது பூமி.

பத்து ஆண்டுகளுக்கு முன்னால் அமெரிக்கப் பள்ளிக்கூடம் ஒன்றில் சந்திர மண்டலப் பயணம் பற்றி வியாசம் எழுதுமாறு ஒரு வகுப்பில் உபாத்தியாயர் மாணவர்களைக் கேட்டுக் கொண்டார்.

ஒரு மாணவன் பின்வருமாறு எழுதினான்: ''சந்திர மண்டலத்துக்குச் சென்று திரும்புவதில் இரண்டே இரண்டு பிரச்னைகள்தான் உள்ளன. அவற்றை வெற்றி கண்டு விட்டால் எல்லாம் சுலபமாக முடிந்து விடும். முதல் பிரச்னை: சந்திரனுக்கு எப்படிப் போய்ச் சேருவது ? இரண்டாவது பிரச்னை: அங்கிருந்து பூமிக்கு எப்படித் திரும்பி வருவது ?''

நல்ல வேளையாக அந்த மாணவனுடைய உபாத்தியாயர் நகைச்சுவையை அனுபவிக்கும் மனம் படைத்தவராக இருந்தார். அதனால் இந்த ஹாஸ்யம் பத்திரிகைகளிலெல்லாம்கூட அடிபட்டது.

அந்த மாணவனுடைய கிண்டலை அன்று எல்லாரும் வெகுவாக அனுபவித்த போதிலும் அமெரிக்க விஞ்ஞானிகளுக்கும் பொறி இயல் நிபுணர்களுக்கும் ஒரு சவாலாக விளங்கியது இந்தப் பிரச்னை. 1961ல் ஜனாதிபதி கென்னடி, ''1970க்குள் மனிதன் சந்திர மண்டலத்தில் சென்று இறங்குவதை நமது இலட்சியமாகக் கொண்டு உழைப்போம்'' என்று அறைகூவினார். அன்றைய தினம் அம்புலிப் பயணத் திட்டம் அமெரிக்காவில் சூடு பிடித்தது. எட்டே வருஷங்களில் நடக்க முடியாதது நடக்கப் போகிறது. கனவு நனவாக இருக்கிறது.

மனிதன் சந்திரனில் அடியெடுத்து வைக்கப் போகிறான்.

இந்த அரிய சாதனையை நிகழ்த்தப் போகும் சரித்திர நாயகர்களையே இந்த இதழ் மேலட்டையில் காண்கிறீர்கள்.

இம்மூவரில் இருவர் சிலந்தி போன்ற அமைப்புக் கொண்ட ஒரு வாகனத்தில் சந்திரனை நெருங்கி அதில் இறங்குவார்கள். மற்றொருவர் விண் கலமொன்றில் சந்திரனைச் சுற்றி வந்து கொண்டிருப்பார். இந்தத் தாய்க் கலத்தில் இருக்கப் போகிறவர் மைக்கேல் காலின்ஸ்.

சிலந்தி வாகனத்தில் பயணம் செய்து அம்புலியில் இறங்கப் போகிறவர்கள் : எட்வின் ஆல்டிரின், நீல் ஆம்ஸ்ட்ராங். இவ்விருவரிலும் முதன் முதலாகச் சந்திரனிக்

அடியெடுத்து வைக்கப் போகிறவர் ஆர்ம்ஸ்ட்ராங் தான். இவர்தான் அம்புலியில் அடியெடுத்து வைக்கப் போகும் முதல் மனிதர்.

ஐந்தாவது வயதில் ஆர்ம்ஸ்ட்ராங் தனது தகப்பனரை, அந்த ஊரில் வந்து இறங்கியிருந்த ஒரு பழங் காலத்து விமானத்தில் பறக்க அழைத்துப் போகுமாறு கெஞ்சினன். ''அந்தப் பயணத்தின் போது ஆர்ம்ஸ்ட்ராங் கொஞ்சம் பயந்துதான் போகும்'' என்று தகப்பனர் கூறுகிறர். எனினும், அன்றைய தினத்திலிருந்து ஆர்ம்ஸ்ட்ராங்கினல் விமானங்களைத் தனது சிந்தையிலிருந்து அகற்றவே முடியவில்லை.

புது ரக விமானங்களைப் பரீட்சார்த்தமாக ஓட்டிச் செல்லும் விமானியாகப் பிற்காலத்தில் பணியாற்றிய ஆர்ம்ஸ்ட்ராங் 'X-15' என்ற விமானத்தில் பூமி மட்டத்திலிருந்து 200,000 அடி உயரத்தில் பறந்தார். பூமியைச் சுற்றிலும் உள்ள வாயு மண்டலம் மறைந்து வெற்றிடமும் விண்வெளியும் தொடங்கும் உயரம் அது! அந்த உயரத்தில் விமானத்தை மணிக்கு நாலாயிரம் மைல் வேகத்தில் ஓட்டினர். இது ஒலியின் வேகத்தை விட ஐந்து மடங்கு அதிகம்! ஒரு விநாடிக்கு 1.11 மைல் வேகம்! இந்த வேகத்தில் செல்கையில் விமானம் ஒரு பக்கத்திலிருந்து இன்னெரு பக்கத்துக்கு மாறிமாறி ஊஞ்சலைப் போல் அலைபாயும். இதைக் கட்டுப்படுத்த விமானத்தில் தானியங்கி சாதனம் ஒன்றுண்டு. ஆர்ம்ஸ்ட்ராங் அந்த வேகத்தில் பறக்கும் போதே இந்தத் தானியங்கி சாதனத்தின் இயக்கத்தை நிறுத்தி விட்டார். அந்தச் சாதனத்தின் உதவியின்றி, மனிதனலேயே விமானத்தை அலைபாய்தலின்றிக் கட்டுப்படுத்த முடியும் என்று நிரூபித்துக் காட்டினர்.



ஆர்ம்ஸ்ட்ராங்கின் இந்தத் துணிவும் தைரியமும் விண்வெளிப் பயணத்தின் போதும் கைகொடுத்து உதவியிருக்கின்றன. ஜெமினி-8 பயணத்தின் போது, உலகைச் சுற்றி வந்துகொண்டிருக்கும் மற்றெரு கலத்துடன் தாங்கள் பயணம் செய்து கொண்டிருக்கும் விண்வெளிக் கலத்தை இணைக்க முடியும் என்று ஆர்ம்ஸ்ட்ராங்கும், டேவிட் ஸ்காட் என்பவரும் முதன் முதலாக நிரூபித்துக் காட்டினர். இதே பயணத்தில் எதிர்பாராதவிதமாக விண் கலத்தில் சில கோளாறுகள் ஏற்பட்டன. இதனல் மூன்று நாட்கள் என்று திட்டமிட்டிருந்த பயணத்தைச் சில மணி நேரங்களிலேயே முடித்துக் கொள்ளும்படி ஆயிற்று. இந்தத் தருணத்தில் ஆர்ம்ஸ்ட்ராங் கலவரமடையாமல் அமைதியாகவும் மிகச் சாமர்த்தியமாகவும்இயங்கிக் கலத்தைப் பத்திரமாகப் பூமிக்குக் கொணர்ந்து சேர்த்தார்.

சென்ற ஆண்டில் ஒரு நாள் சந்திரனில் இறங்குவதை பூமியிலேயே பரீட்சித்துப் பார்த்துக் கொண்டிருந்த போது, சிலந்தி வாகனம் பழுதடைந்து போயிற்று. ஆர்ம்ஸ்ட்ராங் உடனே ஆபத்தை உணர்ந்து பாராசூட் அணிந்து குதித்து விட்டார். அடுத்த சில விநாடிகளில் அந்தச் சிலந்தி வாகனம் பூமியைத் தாக்கி நொறுங்கி எரிந்து விட்டது! ஆனல் பாராசூட் குடை விரிந்து ஆர்ம்ஸ்ட்ராங்கைப் பூமிக்கு நிதானமாகக் கொணர்ந்து சேர்த்தது.

கொரிய யுத்தத்தின் போது எழுபத்தெட்டு முறை யுத்த விமானத்தில் சென்று எதிரி விமானங்களுடன் சண்டை போட்டிருக்கிறர். விமானத் துறையில் பொறி






இடது: விண்வெளி வீரர் எட்வின் ஈ ஆல்டிரின்.

நடுவில்: மைக்கேல் காலின்ஸ்.

வலது: நகை முகத்தோடு நீல் ஏ. ஆர்ம்ஸ்ட்ராங்.



விண்வெளி வீரர் ஆல்ட்ரின் சந்திரனில் இறங்கப் போகும் சிலந்தி வாகனத்தின் 'மாடலை'த் தம் மகன் மைக்குக்குக் காட்டுகிறார்.

இயல் நிபுணராக விளங்கிப் பட்டம் பெற்றவர். பிறகு இதே துறையில் ஆராய்ச்சிகள் செய்து 'டாக்டர்' பட்டமும் பெற்றார்.

B–29 என்னும் ராட்சத விமானங்களை நூறு தடவைகளுக்கு மேல் ஓட்டியிருக்கிறார். இந்த B–29 விமானங்கள் பறந்து கொண்டிருக்கையிலேயே அதனுள்ளேயிருந்து சிறிய ராக்கெட் விமானங்கள் கிளம்பிச் செல்லும்!

இப்படி சமயோசிதமாகவும் திறம்படவும் இயங்குபவரும் ஆற்றல் மிக்கவரும் அநுபவஸ்தருமான ஆர்ம்ஸ்ட்ராங் இம் மாதம் நிகழவிருக்கும் அம்புலிப் பயணத்தின் போது மற்ற இருவருக்கும் தலைவராக விளங்கிச் செயலாற்றுவார்.

அம்புலிப் பயணத்தில் பங்குபெறும் மூவருமே 1930ல் பிறந்தவர்கள்! மூவருமே 165 பவுண்டு எடை உள்ளவர்கள்! இருவர் உயரம் 5 அடி 11 அங்குலம்; மற்றொருவர் உயரம் 5 அடி 10 அங்குலம்! மூவருக்கும் கல்யாணமாகி, மூவருக்கும் குழந்தைகள் உண்டு! மூவரும் விமானம் ஓட்டுவதில் நல்ல அநுபவமுள்ளவர்கள். நாலாயிரம் மணி நேரத்துக்குக் குறையாமல் வானில் பறந்திருப்பவர்கள். மூவருமே முன்பு நடைபெற்ற விண்வெளிப் பயணங்களின்போது ஒவ்வொரு முறை பங்கு பெற்றிருப்பவர்கள். இப்படிப் பல ஒற்றுமைகள் இந்தச் சரித்திர நாயகர்களிடத்தில் உண்டு.

அம்புலியில் இறங்கப் போகும் இரண்டாவது மனிதன் எட்வின் ஆல்ட்ரின். சிலந்தி வாகனத்தை ஓட்டிச் சென்று சந்திரனில் இறக்கப் போகிறவர் இவரே. விமானத் துறையில் பட்டம் பெற்ற பிறகு டாக்டர் பட்டம் பெற விண்வெளித் துறையின் ஓர் அம்சம் குறித்து ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிப் பல்கலைக் கழகத்தின் மதிப்பீட்டுக்காகக் கொடுத்தார். அதன் இறுதியில், "இந்தக் கட்டுரையை நான் விண்வெளி வீரர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன். அடடா! அவர்களில் ஒருவனாக நான் இருக்கக் கூடாதா?" என்று எழுதியிருந்தார்.

அவர் எண்ணம் செயலாகியது. ஜெமினி-12 விண்வெளிப் பயணத்தின்போது விண்கலத்தின் ஒரு கதவைத் திறந்து, அதன் வழியே தலையும் உடம்பின் மேல் பகுதியும் வெளியே நீட்டிக் கொண்டிருக்க, தமது ஆசனத்தில் எழுந்து நின்றபடி, 208 நிமிஷங்கள் பயணம் செய்தார் இவர். அப்போது, அதலபாதாளத்தில் அல்ல, அதற்கும் கீழே கீழே இருந்த உலகைப் பல புகைப்படங்கள் எடுத்தார். மேலும் இதே ஜெமினி–12 விண்வெளிப் பயணத்தின் போது விண்கலத்தை விட்டு வெளியே வந்து விண்வெளியில் 129 நிமிஷங்கள் நடந்தார். இதைவிட அதிகமான நேரம் இன்று வரை விண்வெளியில் வேறு யாருமே நடந்தது கிடையாது! சூரியக் கிரகணத்தை இவர் விண்வெளியில் இருந்தபடி புகைப்படம் எடுத்தார். இந்தச் சாதனையையும் இது வரையில் வேறு யாரும் நிகழ்த்தியது இல்லை.

கொரிய யுத்தத்தின்போது 66 தடவைகள் இவர் எதிரி விமானங்களுடன் போரிடப் பறந்திருக்கிறார்.

சரித்திர நாயகர்களில் மூன்றாவது நபரான மைக்கேல் காலின்ஸுக்குச் சந்திர மண்டலம் எட்டியும் எட்டாமல் இருக்கும். அவர் சந்திரனில் இறங்கப் போவதில்லை. தாய்க் கலத்தில் இருந்தபடி எழுபது மைல் உயரத்தில் சந்திரனைச் சுற்றி வருவார். எனினும், இவரது பணி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. பூமியில் இருக்கும் விஞ்ஞானிகள் இவர் மூலமாகச் சந்திரனில் இறங்கும் இருவருடனும் தொடர்பு கொள்வார்கள். (நேரடியாகத் தொடர்பு கொள்ளவும் வசதி உண்டு.) ஆர்ம்ஸ்ட்ராங்கும் ஆல்ட்ரினும் சந்திர மண்டலத்தில் தாங்கள் ஆற்ற வேண்டிய பணிகளை முடித்துக் கொண்டு மீண்டும் சிலந்தி வாகனத்தில் ஏறி, அதை இயக்கி மேலே கிளம்புவார்கள். தாய்க் கலத்துடன் வந்து இணைந்து கொள்வார்கள். அவர்கள் தாய்க் கலத்தில் இணைவதில் ஏதேனும் சிரமம் ஏற்பட்டால் காலின்ஸ் தாய்க் கலத்தைச் சாமர்த்தியமாக இயக்கி இரு வாகனங்களும் ஒன்றோடொன்று பிணைந்துகொள்ள வழி செய்ய வேண்டும். இந்த முக்கிய பொறுப்பு காலின்ஸுக்கு உண்டு. இப்படி விண்வெளியில் இரு கலங்களை இணைப்பதில் காலின்ஸுக்கு ஏற்கனவே அநுபவம் உண்டு. ஜெமினி – 10 பயணத்தின் போது இவ்விஷயத்தில் சில அபார சாதனைகளைப் புரிந்திருக்கிறார்.

அப்பாலோ – 8 பயணத்தின் போதே காலின்ஸ் சந்திர மண்டலத்தைச் சுற்றி வந்திருக்க வேண்டும். ஆனால் அப்போது அவர் முதுகெலும்பில் ஒரு சிறு கோளாறு ஏற்பட்டு சஸ்திர சிகிச்சை பெற வேண்டியதாயிற்று. வேறு ஒருவர் அவருக்குப் பதிலாகச் சென்றார். அப்போது காலின்ஸுக்குக் கிட்டாத பெருமை இப்போது கிடைக்கவிருக்கிறது.

சந்திர மண்டலத்துக்கு வருங்காலத்தில் பலர் போகலாம், வரலாம். ஏன், அம்புலிக்கு அப்பாலும் எதிர்காலத்தில் பிரயாணங்கள் நடைபெறலாம். என்றாலும், இந்த உலகை விட்டு மற்றொரு உலகில் முதன் முதலாக மனிதன் அடியெடுத்து வைப்பது என்பது ஒரு தடவை தானே நிகழ முடியும்?

சரித்திர நாயகர்களை வாழ்த்தி விடை கொடுத்து அனுப்புவோம்!



# நெருங்கி உறவாடும்,

## நெஞ்சைக் கவரும் நறுமணமுள்ள

# லக்மே டால்கம்

உங்கள் இதயம் கவரும் நறுமணத்தை மணிக் கணக்கில் வீசிக்கொண்டிருக்கும் டால்கம்—நெஞ்சை விட்டகலாத லக்மே! அந்த இணையற்ற இன்பத்தை அனுபவிக்கத் தாமதமேன்? இன்றே உங்கள் மேனியின் மீது இன்மணம் கமழும் லக்மே டால்கம் தூவுங்கள். அது பட்டுப் போன்ற மென்மையானது; நேர்த்தியானது; இணைபிரியாதது. ஒரு நாளை 'லக்மீ' சுகமாகத் துவக்க, இதைவிட இன்பம் தருவது வேறென்ன இருக்கப் போகிறது?

இது ஐவகை மணம் வீசி, உங்களின் அன்புடன் அணைய வருகிறது. லேவெண்டர், வெட்டிவேர், ஜிரான், சந்தனம் ஆகிய நான்கும், மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருகின்றன. ஐந்தாவதான ஃப்ளோரல் மிஸ்ட் பெரிய ஃபேமிலி சைஸில் வருகிறது. எல்லாமே நீங்கள் எளிதில் வாங்கக்கூடிய விலையில்; எல்லாமே இன்ப மணம்; எல்லாமே இன்ப மயம்!





# பொன்னியின் செல்வன்



முப்பத்தாறும் அத்தியாயம்

## தகுதிக்கு மதிப்பு உண்டா?

அமரர் கல்கி

இளவரசரும் 'நந்தினி'யும் நின்ற இடத்தை நோக்கி வந்தியத்தேவன் விரைவாகவே நடந்தான். அவன் அவ்விடத்தை அடைவதற்குள் கொஞ்சம் சந்தேகம் தோன்றி விட்டது. இவள் நந்தினிதானு? பழுவூர் ராணிக்குரிய ஆடை ஆபரணங்கள் ஒன்றுமில்லையே! சந்நியாசினியைப்போல் அல்லவா எளிய உடை தரித்திருக்கிறுள்? முகம் நந்தினியின் முகம் மாதிரி தோன்றுகிறது. ஆனல் ஏதோ ஒரு வித்தியாசமும் இருக்கிறது. அது என்ன?

அவர்கள் நின்ற இடத்துக்கு வந்தியத்தேவன் சென்றதும் அந்த ஸ்திரீ நகர்ந்து வீதி ஓரத்து வீடுகளின் நிழலில் மறைந்தாள். வந்தியத்தேவன் பரபரப்புடன் அவளைத் தொடர்ந்து செல்லப் பார்த்தான். இளவரசர் அவனுடைய கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்திஞர்.

''ஐயா! அந்த ஸ்திரீ யார்? பார்த்த முகமாகத் தோன்றியது!'' என்ருன்.

இதற்குள் அங்கு வந்து சேர்ந்த ஆழ்வார்க்கடியான், ''அந்த ஸ்திரீ சோழ நாட்டின் குல தெய்வமாகத்தான் இருக்க வேண்டும். அதோ பாருங்கள்! நாம் அச்சமயம் நகர்ந்திரா விட்டால் இத்தனை நேரம் புத்தர் பெருமானின் சரணங்களை அடைந்திருப்போம்'' என்ருன்.

திருமலை சுட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்தார்கள். அங்கே கட்டடத்தின் மேற்பகுதி இடிந்து விழுந்திருந்த இடம் ஒரு சிறிய குன்றைப் போல் இருந்தது. ஒரு பெரிய யானையைக்கூட அந்தக் குன்று வெளியில் வர முடியாதபடி அமுக்கிக் கொன்றிருக்கும். மூன்று சிறிய மனிதர்கள் எம்மாத்திரம்?

''நல்ல சமயத்திலேதான் நம் குல தெய்வம் தோன்றி நம்மைக் கையைத் தட்டி அழைத்தது'' என்ருர் பொன்னியின் செல்வர்.

''இளவரசே! அந்த ஸ்திரீயை யார் என்று சொன்னீர்கள்?'' என்று வந்தியத்தேவன் வியப்புடன் கேட்டான்.

''உமக்கு யார் என்று தோன்றியது? அவளைத் தொடர்ந்து போக ஏன் யத்தனித்தீர்?'' என்று இளவரசர் கேட்டார்.

''சோழர்களின் குல தெய்வம் என்றல்லவா இந்த வைஷ்ணவர் சொன்ஞர்? சோழர் குலத்துக்குக் கேடாக வந்த தேவதையாக எனக்குத் தோன்றியது.''

''அப்படியென்ருல்...? யார் என்று எண்ணிச் சொல்கிறீர்?''

''என்னுடைய பிரமைதானே என்னமோ? பழுவேட்டரையர் இளைய தாரமாக மணந்திருக்கும் நந்தினி தேவி என்று தோன்றியது. உங்கள் இருவருக்கும் அப்படிப்பட வில்லையா?'' என்ருன் வந்தியத்தேவன்.

''நான் நன்ருய்ப் பார்க்கவில்லை. ஆனுலும் அது உன் சித்தப்பிரமையாகத்தான் இருக்க வேண்டும். பழுவூர் ராணி இங்கு எப்படி வந்திருக்க முடியும்?'' என்ருன் ஆழ்வார்க்கடியான்.

''இவர் சொல்வது முழுதும் சித்தப் பிரமையன்று. கண்ணின் பிரமையும் அதில் சேர்ந்திருக்கிறது. அப்படி ஓர் அதிசயமான முக ஒற்றுமை இருப்பதாக எனக்குக்கூடச் சில சமயம் தோன்றியதுண்டு...வாருங்கள்! நடந்துகொண்டே பேசலாம்!'' என்ருர் இளவரசர்.

வீதி ஓரமாக வீடுகளின் நிழலில் நடப்பதற்குப் பதிலாக இப்போது மூவரும் நடு வீதியில் நிலா வெளிச்சத்தில் நடக்கத் தொடங்கிஞர்கள்.

சற்று நடந்ததும், ''இளவரசே! தங்களைக் கையைத் தட்டி அழைத்து அந்த அம்மாள் என்ன சொன்ஞள்?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"என்னைத் தேடிக் கொண்டு இரண்டு சத்துருக்கள் வந்திருக்கிறார்கள் என்று சொன்னாள். அவர்கள் என்னைக் கொல்வதற்குச் சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டிருப்பதாகவும் சொன்னாள்."

"அடி பாவி! ஒருவேளை எங்களைப் பற்றித்தான் அப்படிச் சொன்னாளா என்ன?" என்று வந்தியத்தேவன் திடுக்கிட்டுக் கேட்டான்.

பொன்னியின் செல்வர் சிரித்துவிட்டு, "இல்லை, நீங்கள்தான் என்று குறிப்பிட்டுச் சொல்லவில்லை. அப்படி நீங்களாகவே இருந்தாலும் கவலையில்லை. என் உயிர் மிகக் கெட்டியானது என்று அந்தத் தேவி சொல்லியிருக்கிறாள். முன்னம் பல தடவை என்னைக் காப்பாற்றியும் இருக்கிறாள்!" என்றார்.

"ஐயா! அந்த இரண்டு பகைவர்கள் யார் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் பார்த்திபேந்திர பல்லவருடன் தங்களைத் தேடி வந்தவர்கள். இடிந்து விழுந்த மாளிகையில் இரண்டு உருவங்கள் தெரிந்தன. அவர்களாகத்தான் இருக்க வேண்டும்!" என்றான் திருமலை.

"ஐயா! வைஷ்ணவரே! இதை முன்னமேயே ஏன் சொல்லவில்லை? நீங்கள் மேலே செல்லுங்கள். நான் போய் அந்த இடிந்த வீட்டைச் சோதனை போட்டு விட்டு வருகிறேன்!" என்று வந்தியத்தேவன் திரும்ப யத்தனித்தான்.

இளவரசர் அவனை மறுபடியும் கையைப் பிடித்து நிறுத்தி, "அவசரம் ஒன்றுமில்லை. அந்தப் பாழடைந்த வீட்டில் அவர்களைக் கண்டுபிடிக்கவும் முடியாது. பிறகு பார்த்துக் கொள்ளலாம். நான் மறு உத்தரவு போடும் வரையில் நீர் என்னுடனேயே இருக்க வேண்டும். தெரிகிறதா? இந்தப் பாழடைந்த நகரத்தில் இன்னும் எந்த மூலை முடுக்கில் என்ன அபாயம் காத்திருக்கிறதோ, யார் கண்டது? வீர சிகாமணியே! உம்மை நம்பியல்லவா நான் வேறு யாரையும் மெய்காவலுக்கு அழைத்து வரவில்லை? இப்படி நடு வீதியில் என்னைக் கைவிட்டுப் போய் விட்டால் நான் என்ன செய்வேன்?" என்றார்.

இந்த வார்த்தைகள் வந்தியத் தேவனைப் போதை கொள்ளச் செய்தன. அவன் நாத் தழுதழுக்க, "ஐயா! உங்களை விட்டு இனி நான் ஒரு கணமும் அகல மாட்டேன்!" என்றான்.

ஆழ்வார்க்கடியான், "உன்னை விட்டு நானும் அகல மாட்டேன். இளவரசருக்கு நீ காப்பு; உனக்கு நான் காப்பு" என்று சொன்னான்.

சிறிது நேரத்துக்கெல்லாம், மகாஸேன சக்கரவர்த்தியின் பாழடைந்த மாளிகையின் உட்புறத்தை மூவரும் அடைந்தார்கள். விசாலமான ஓர் அறையில் மூன்று பேருக்கும் பழைய காலத்துக் கட்டில்களில் படுக்கை விரித்திருந்தது. மூவரும் படுத்துக் கொண்டார்கள். அறையின் ஒரு பக்கத்துச் சுவரில் இருந்த பலகணியின் துவாரங்கள் வழியாக நிலா வெளிச்சம் உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

"பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த அரண்மனையில் இதே இடத்தில் இலங்கையின் சக்கரவர்த்திகளும் இளவரசர்களும் அவர்களுடைய அந்தப்புர



மாதரசிகளும் படுத்திருந்திருப்பார்கள். அப்போதும் இதே மாதிரி நிலாவின் கிரணங்கள் இந்தப் பலகணியின் வழியாக எட்டிப் பார்த்திருக்கும். இப்போது இதே இடத்தில் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களைப் பார்த்து விட்டு இந்த நிலாக் கிரணங்கள் ஏமாற்றம் அடையும். இல்லையா, வந்தியத்தேவரே!" என்றார் அருள்மொழி வர்மர்.

"ஐயா! தங்களையும் இந்த வைஷ்ணவரையும் பற்றி நீங்கள் எது வேணுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். என்னை மட்டும் சாதாரண மனிதன்



என்று சொல்ல வேண்டாம்!" என்றான் வல்லவரையன்.

"மறந்துவிட்டேன்; மன்னிக்க வேண்டும். தாங்கள் பூர்விகமான வல்லத்தரசர்கள் குலத்தில் பிறந்த அரசிளங்குமரர் அல்லவா?"

"ஆம், ஐயா, ஆம்! என் மூதாதை ஒருவரைப் பற்றி ஒரு புலவர் பாடியிருப்பதைக் கேட்டால் இந்த வீர வைஷ்ணவர் பொறாமையினால் புழுங்கிச் செத்துப் போனாலும் போய் விடுவார்."

"போனாலும் போகட்டும்! திருமலை நல்ல தமிழ் அபிமானி. பல்லவ குலத்து நந்தி வர்மனைப் போல் தமிழ்ப் பாடலுக்காக உயிரைக் கொடுக்கவும் தயங்க மாட்டார். ஆகையால், பாடலைச் சொல்லுங்கள், கேட்கலாம்."

கொஞ்சம் தயக்கத்துடன் வல்லவரையன் பின்வரும் பாடலைக் கூறினான்:—

**"என்கவிகை என்சிவிகை**
**என்கவசம் என்துவசம்**
**என்கரியீ(து) என்பரியீ(து)**
**என்பரே — மன்கவனை**
**மாவேந்தன் வாணன்**
**வரிசைப் பரிசுபெற்ற**
**பாவேந்தரை, வேந்தர்**
**பார்த்து!"**

அதைக் கேட்ட பொன்னியின் செல்வர், "திருமலை, நீ தமிழ்ப் புலவனாயிற்றே! இந்தப் பாடலின் பொருள் என்ன, சொல்!" என்றார்.

"ஐயா! என்னைப் பரிசோதிக்கிறீர்கள் போலும். ஆகட்டும், இதோ சொல்லுகிறேன். மாவேந்தர் வாணரின் அரண்மனை வாசலில் சிற்றரசர்கள் பலர் இராஜ தரிசனத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு இலேசில் தரிசனம் கிட்டவில்லை. ஏனெனில், பாவேந்தர்களாகிய கவிராயர்கள் முன்னமே அரண்மனைக்குள் சென்றிருந்தார்கள். அவர்க

ளுடைய பாடல்களைக் கேட்டு விட்டு வாணப் பேரரசர் மன மகிழ்ந்தார். அவர்களுக்குப் பரிசில்கள் கொடுத்து அனுப்பினார். பூச்சக்கரக் குடைகள், தந்தப் பல்லக்குகள், முத்துக் கவசங்கள், ரத்தினத் துவஜங்கள், யானைகள், குதிரைகள் முதலிய பல வகைப் பரிசுகள் கொடுத்து அனுப்பினார். ஆசார வாசலில் காத்திருந்த சிற்றரசர்கள் அந்தப் பரிசில்களைப் பார்த்து வயிறெரிந்து, 'அடடா! இது என் குடை அல்லவா? என் பல்லக்கு அல்லவா? என் யானை அல்லவா? என் குதிரை அல்லவா? இந்தப் பாழும் புலவர்கள் கொண்டு போகிறார்களே!' என்று புலம்பினார்கள். அந்தச் சிற்றரசர்கள் மாவேந்தர் வாணருக்குக் காணிக்கைகளாகக் கொண்டு வந்து கொடுத்திருந்த பொருள்களை வாண மன்னர் புலவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார். இளவரசே! பாடலுக்குப் பொருள் சரிதானே?''

''நீ சொல்லுவதில் தவறு இருக்குமா? அடாடா! என்ன அற்புதமான பாடல்! எவ்வளவு நயமான கற்பனை! இதைப் பாடிய மகாகவி யாரோ தெரியவில்லை! வாணர் குல திலகமே! வந்தியத்தேவரே! உமது மூதாதைகளின் இராஜ்யம் பெரிதோ, சிறிதோ, அதைப் பற்றிக் கவலையில்லை. இந்த மாதிரி ஒரு பாடலைப் பெற்றார்களே, அதைக் காட்டிலும் அவர்களுக்குச் சிறப்பு என்ன வேண்டும்! அவர்களுடைய குலத்திலே பிறந்த தாம் இந்த அரண்மனையில் படுக்கத் தகுந்தவர்தான்! மகா சேனரின் கட்டில் மாத்திரம் என்ன? சாக்ஷாத் துஷ்டகமனு சக்கரவர்த்தி படுத்திருந்த கட்டில் இப்போது கிடைக்குமானால் அதிலேயே தாம் படுக்கலாம். நீர் அதற்குத் தகுதிவாய்ந்தவர்தான்!''

''ஆமாம், ஐயா! ஆமாம்! நான் எதற்கும் தகுதி வாய்ந்தவன்தான். ஆனால் இந்த நாளில் தகுதிக்கு யார் மதிப்புக் கொடுக்கிறார்கள்? அந்த பிக்ஷுக்கள் இந்த இலங்கா ராஜ்யத்தின் கிரீடத்தை எனக்குக் கொடுத்தார்களா? வேண்டாம் என்று மறுதளிக்கக் கூடிய தங்களைப் பார்த்துத் தானே கொடுத்தார்கள்? அப்போது எனக்கு என்ன ஆத்திரம் வந்தது தெரியுமா? கிரீடத்தைத் தூக்கி என் தலையில் நானே சூட்டிக் கொண்டு விடலாமா என்று பார்த்தேன்! இந்த வீர வைஷ்ணவர் போட்டிக்கு வந்து விடுவாரே என்று சும்மா இருந்து விட்டேன்!''

இதைக் கேட்டதும் அருள்மொழி வர்மர் கலகல வென்று உரத்துச் சிரித்தார். அந்தச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு வந்தியத்தேவன் உள்ளம் மகிழ்ந்தது. வெளிப்படையில் மேலும் கோபத்தைக் காட்டி, ''சிரித்தால் மட்டும் சரியாகப் போய் விட்டதா? செய்த தவற்றுக்குப் பரிகாரம் என்ன?'' என்றான்.

''ஐயா! வாணர்குல திலகமே! சத்தியம், தர்மம் என்று சொன்னேனே! சிம்மாசனம் வேண்டாம் என்று மறுத்ததற்கு அவை சரியான காரணங்கள் என்று தங்களுக்குப் படவில்லையா?''

''சத்தியம், தர்மம் இவற்றின் பேரில் ஏற்கனவே எனக்குக் கொஞ்சம் சபலம் இருந்தது. இனிமேல் அவற்றின் முகத்திலேயே விழிப்பதில்லை, எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்வதில்லை என்று முடிவு செய்து விட்டேன்.''

''அடாடா! ஏன்? எதற்காக அப்படிப்பட்ட முடிவு செய்தீர்? அவற்றின் பேரில் என்ன கோபம்?''

''கோபம் ஒன்றுமில்லை. சத்தியம், தர்மம் என்னும் கன்னியர் மீது தாங்கள் காதல் கொண்டு விட்டதாகச் சொல்லவில்லையா? அதற்காக இந்த இலங்கா ராஜ்யத்தைத் தியாகம் செய்ததாகவும் சொல்ல வில்லையா? வேறொருவர் காதலித்த பெண்களை நான் மனத்தினாலும் நினைப்பதில்லை!''

பொன்னியின் செல்வர் மறுபடியும் கடகட வென்று சிரித்தார். ''உம்மைப் போல் வேடிக்கைக்காரரை நான் பார்த்ததே இல்லை!'' என்றார்.

''ஆம், ஐயா! தங்களுக்கு வேடிக்கையா யிருக்கிறது. எனக்கு வயிறு எரிகிறது. இலங்கைச் சிம்மாதனம் தங்களுக்கு வேண்டாம் என்றால், பக்கத்தில் நான் நின்றேனே, என் பக்கம் கைகாட்டி, 'இவனுக்குக் கொடுங்கள்!' என்று சொல்லி யிருக்கக் கூடாதா?'' என்றான் வந்தியத்தேவன்.

அருள்மொழிவர்மர் சிரித்து ஓய்ந்த பிறகு, ''வந்தியத்தேவரே! இராஜ்யத்தை ஏற்றுக் கொள்வது அவ்வளவு எளிய காரியமா? அதிலும் புத்த பிக்ஷுக்கள் கொடுத்து ஏற்றுக் கொள்வது சிறிதும் முறையல்ல. பின்னால் பெரிய விபரீதங்களுக்கு இடமாகும். மதத் தலைவர்கள் மத விஷயங்களுடன் நிற்க வேண்டும். மதத் தலைவர்கள் இராஜரீக காரியங்களில் தலையிட்டால் மதத்துக்கும் கேடு; இராஜ்யத்துக்கும் கேடு. மேலும் இன்று எனக்குச் சிம்மாசனம் கொடுக்க வந்த புத்த பிக்ஷுக்கள் இந்த நாட்டிலுள்ள எல்லா புத்த மதத்தாருக்கும் தலைவர்கள் அல்ல. இவர்கள் ஒரு கூட்டத்துக்குத் தலைவர்கள். இவர்க

ளுடைய சங்கத்தைப் போல் இன்னும் இரண்டு சங்கங்கள் இருக்கின்றன. இவர்களிடம் நாம் இராஜ்யத்தை ஒப்புக் கொண்டால் இவர்களுடைய இஷ்டப்படி இராஜ்யம் ஆள வேண்டும். மற்ற இரு சங்கத்தாரும் உடனே நம் விரோதிகள் ஆவார்கள்!'' என்றார்.

''வல்லத்து இளவரசருக்கு இப்போது இவ்விடத்து நிலைமை புரிந்ததா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''புரிந்தது, புரிந்தது! அங்கே விஷ்ணு பெரியவரா சிவன் பெரியவரா என்று சண்டை போடுகிற மூடர்களைப் போல் இங்கேயும் உண்டு என்று புரிந்தது!'' என்றான் வந்தியத்தேவன்.

''நீங்கள் இங்கே சண்டை ஆரம்பித்து விடாதீர்கள். இரவு வெகு நேரம் ஆகி விட்டது. அதோ பெரஹரா ஊர்வலத்திலிருந்து ஜனங்கள் கலைந்து வரும் சத்தமும் கேட்கிறது. இனிமேல் சற்றுத் தூங்கலாம்'' என்றார் இளவரசர்.

''எனக்குத் தூக்கம் வராது. நடு வீதியில் கையைத் தட்டி அழைத்து நம்மை உயிருடன் சமாதியாகாமல் காப்பாற்றிய அம்மாள் யார் என்று தெரிந்து கொண்டால்தான் தூக்கம் வரும்.''

''அவள் யார் என்பது இன்னும் எனக்குத் தெரியாது. ஆனால் அவளைப் பற்றி எனக்குத் தெரிந்த செய்திகளை வேணுமானால் சொல்லுகிறேன். கேட்க விரும்பினால் என் அருகில் வந்து உட்காருங்கள்!'' என்று சொன்னார் இளவரசர்.

## முப்பத்தேழாம் அத்தியாயம்

# காவேரி அம்மன்

**வ**ந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் ஆர்வத்துடன் எழுந்து போய் இளவரசரின் கட்டிலுக்குப் பக்கத்தில் கீழே உட்கார்ந்தார்கள். இளவரசர் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்:

''நான் சிறு பையனாயிருந்தபோது ஒரு சமயம் காவேரி நதியில் என் பெற்றோர்களுடன் படகில் போய்க் கொண்டிருந்தேன். என் தமையனும் என் தமக்கையும்கூட அச்சமயம் படகில் இருந்தார்கள். அவர்கள் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் மட்டும் காவேரி நதியின் நீர், சுழித்துச் சுழித்து ஓடுவதையும் அந்தச் சுழிகளில் சில சமயம் கடம்ப மலர்கள் அகப்பட்டுக் கொண்டு சுழல்வதையும் கவனித்துக் கொண்டிருந்தேன். அந்தச் சின்னஞ் சிறிய பூக்கள் அப்படிச் சுழலில் அகப்பட்டுத் தவிப்பதைப் பார்த்து எனக்கு வேதனை உண்டாகும். சில சமயம் படகின் ஓரமாகக் குனிந்து தவிக்கும் கடம்ப மலர்களை நீர்ச் சுழல்களிலிருந்து எடுத்து விடுவேன். அப்படி எடுத்து விட்ட ஒரு சமயத்தில் தவறித் தண்ணீரில் விழுந்து விட்டேன்! தலைகுப்புற விழுந்தபடியால் திணறித் திண்டாடிப் போனேன்!

''காவேரியின் அடிமணலில் என் தலை இடித்த உணர்ச்சி இப்போதும் என் நினைவில் இருக்கிறது. பிறகு வேகமாக ஓடிய தண்ணீர் என்னை அடித்துத் தள்ளிக் கொண்டு போனதும் நினைவிருக்கிறது. எங்கேயோ வெகு தூரத்தில் பலருடைய கூக்குரல்களின் சத்தம் கேட்பதுபோலிருந்தது. மூச்சுத் திணறத் தொடங்கியது. சரி, காவேரி நதி நம்மைக் கடலில் கொண்டு போய்த் தள்ளி விடப் போகிறது என்று நினைத்துக் கொண்டேன். பெற்றோர்களும் தமக்கையும் தமையனும் நம்மைக் காணாமல் எவ்வளவு துன்பப்படுவார்கள் என்ற நினைவும் உண்டாயிற்று. அந்தச் சமயத்தில் யாரோ என்னை இரு கைகளாலும் வாரி அணைத்து எடுத்தது போலிருந்தது. அடுத்த கணத்தில் தண்ணீருக்கு மேலே வந்து விட்டேன். தலை, கண், மூக்கு, வாய் எல்லாவற்றிலிருந்தும் தண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. ஆயினும் என்னை வாரி எடுத்துக் காப்பாற்றிய கைகள் என் கண்ணுக்குத் தெரிந்தன. பிறகு அந்தக் கரங்களுக்குரியவளின் முகத்தையும் பார்த்தேன். சில கண நேரந்தான் என்றாலும், அந்த முகம் என் மனத்தில் பதிந்து விட்டது. இதற்குமுன் எப்போதோ பார்த்த முகமாகவும் தோன்றியது. ஆனால் இன்னார் என்பதாகத் தெரியவில்லை.

''பின்னர்? அந்தக் கைகள் வேறு யாரிடமோ என்னைக் கொடுத்தன. மறு கணம் நான் படகில் இருந்தேன். தாய் தந்தை, தமக்கை, தமையன் எல்லாரும் என்னைச் சுற்றிக் கொண்டார்கள். அவர்களுடைய துயரமும், பரிவும், அன்பும், ஆதரவும் என் கவனத்தை முழுதும் கவர்ந்து விட்டன. சிறிது நேரத்துக்குப் பிறகு என்னைத் தண்ணீரிலிருந்து எடுத்துக் காப்பாற்றியது யார் என்பதைப் பற்றிக் கேள்வி எழுந்

தது. ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்கள். என்னையும் கேட்டார்கள். நானும் சுற்று முற்றும் பார்த்தேன். அந்தத் தெய்விகமான முகத்தை எங்கும் காணவில்லை. ஆகையால் கேள்விக்கு மறுமொழி சொல்ல முடியாமல் விழித்தேன். கடைசியில் எல்லாருமாகச் சேர்ந்து காவேரி அம்மன்தான் என்னைக் காப்பாற்றியிருக்க வேண்டும் என்று தீர்மானித்தார்கள். நான் நதியில் விழுந்து பிழைத்த தினத்தில் ஆண்டுதோறும் காவேரி அம்மனுக்குப் பூஜை போடவும் ஏற்பாடு செய்தார்கள். ஆனால் என் மனத்தில் மட்டும் திருப்தி ஏற்படவில்லை. என்னைக் காப்பாற்றியது காவேரி அம்மனாயிருந்தாலும் சரி, வேறு மானிட ஸ்திரீயாக இருந்தாலும் சரி, என் மனத்தில் பதிந்திருந்த அவளுடைய திரு முகத்தை இன்னொரு தடவை தரிசிக்க வேண்டும் என்ற தாபம் என் மனத்தில் குடிகொண்டு விட்டது. காவேரி நதிப் பக்கம் போகும்போதெல்லாம் அத்தேவி திடீரென்று நீரிலிருந்து எழுந்து எனக்குத் தரிசனம் தர மாட்டாளா என்ற ஆசையுடன் அங்குமிங்கும் பார்ப்பேன். நாளாக ஆக, அவள் ஒரு மானிட ஸ்திரீயாகவே இருக்கலாம் என்ற எண்ணம் வலுப்பட்டது. ஆகையால் எந்தத் திருவிழாவுக்குப் போனாலும் அங்கே கூடியுள்ள மூதாட்டிகளின் முகங்களையெல்லாம் நான் ஆர்வத்தோடு பார்ப்பது வழக்கம். சில காலத்துக்குப் பிறகு அப்படிப் பார்ப்பது அவ்வளவு நல்ல வழக்கமன்று என்பதை உணர்ந்தேன். வருஷம் ஆக ஆக, மறுபடியும் அந்தத் தெய்வ முகத்தைத் தரிசிக்கலாம் என்ற ஆசையை இழந்து விட்டேன்.

"சுமார் ஒரு வருஷத்துக்கு முன்னால் நமது தென்திசைப் படைகளின் மாதண்ட நாயகனுடன் நான் இங்கு வந்து சேர்ந்தேன். அதற்கு முன்பே சேநாபதி பூதிவிக்கிரம கேசரி இலங்கையில் பல பகுதிகளைப் பிடித்திருந்தார். இந்த அநுராதபுரம் பல தடவை கைமாறி அப்போது மறுபடியும் மகிந்தன் படைகளின் வசத்தில் இருந்தது. இந்நகரை நம் வீரர்கள் முற்றுகை யிட்டிருந்தார்கள். முற்றுகை நடந்து கொண்டிருந்த சமயத்தில் நான் இலங்கையின் பல பகுதிகளையும் பார்த்துத் தெரிந்து கொள்ள விரும்பினேன்.. பொறுக்கி எடுத்த ஆயிரம் வீரர்களை என்னுடன் சேநாபதி அனுப்பி வைத்தார். நம் சைன்யத்தின் வசப்பட்டிருந்த எல்லாப் பகுதிகளுக்கும், காடு, மேடு, மலை, நதி ஒன்றும் விடாமல் போய், அந்தந்தப் பிரதேசங்களின் இயல்பை நன்கு தெரிந்து கொண்டு வந்தேன். இந்த இலங்கைத் தீவையொட்டிக் கடலில் பல சிறிய தீவுகள் உண்டு என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அந்தத் தீவுகளுக்கும் போய்ப் பார்த்து வந்தேன். இப்படிச் சுற்றி வருகையில் ஒரு சமயம் இந்த நகரத்துக்கு வடக்கே சில காத தூரத்தில் காட்டின் மத்தியில் தாவடி போட்டுக் கொண்டு தங்கி யிருந்தோம். நாங்கள் தங்கி யிருந்த இடத்தின் பக்கத்தில் 'யானை இறவு'த் துறை இருந்தது. அங்கே இலங்கைக்குக் கிழக்கேயுள்ள கடலும் மேற்கேயுள்ள கடலும் மிக நெருங்கி வந்து ஒரு குறுகிய கால்வாயின் மூலம் ஒன்று சேருகின்றன. அந்தத் துறையின் வழியாகச் சில சமயம் யானை மந்தைகள் இலங்கையின் வட பகுதிக்குச் செல்வது வழக்கமாம். ஆகையால் அந்த இடத்துக்கு 'யானை இறவு' என்று பெயர் வந்ததாகச் சொல்கிறார்கள். நாங்கள் அங்கே தங்கியிருந்த சமயத்தில் ஒரு விசித்திரமான சம்பவம் நிகழ்ந்தது. இரவு நேரங்களில் தாவடிக்குச் சமீபத்தில் ஒரு புலம்பல் குரல் கேட்டது. அது மனிதக் குரலா, பட்சியின் குரலா, விலங்கின் குரலா என்று முதலில் தெரியவில்லை. கேட்பவர்கள் ரோமம் சிலிர்க்கும்படியான சோகம் அதில் தொனித்தது. முதலில், தாவடியின் ஓரத்தில் இருந்த வீரர்கள் காதில் விழுந்தது. அதை அவர்கள் பொருட்படுத்தாமல் இருந்தார்கள். பிறகு, பாசறையைச் சுற்றிலும் பல இடங்களிலும் கேட்டது. என்னிடத்திலும் சிலர் வந்து சொன்னார்கள். நான் அதை இலட்சியம் செய்யவில்லை. 'பேய் பிசாசு என்று பயப்படுகிறீர்களா? அப்படியானால் ஊருக்குத் திரும்பிப் போய் அம்மா மடியில் பயமின்றிப் படுத்துத் தூங்குங்கள்!' என்றேன். இதனால் அவர்களுக்கு ரோஷம் வந்துவிட்டது. அப்படி ஓலமிடுகிற குரல் மனிதக் குரலா, அல்லது விலங்கின் குரலா அல்லது பிசாசின் குரலா என்று தெரிந்து கொள்ளத் தீர்மானித்தார்கள். ஓலம் வந்த இடத்தை நோக்கி ஓடிப் போய்ப் பார்த்தார்கள். அவர்கள் அருகில் நெருங்கியதும் அந்தக் குரலுக்குரிய உருவம் ஓடத் தொடங்கியது. அது ஒரு பெண்ணின் உருவம் போலத் தோன்றியது. ஆனால் அந்த உருவத்தை இவர்களால் பிடிக்க முடியவில்லை. அதற்குப் பிறகும் அந்த ஓலம் நிற்காமல் அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தது.

"முதலில் அதை நான் இலட்சியம் செய்யாமல்தானிருந்தேன். ஆனால் என்னுடைய வீரர்களுக்கு இதைத் தவிர வேறு பேச்சே இல்லாமற் போய்விட்டது. உண்மையிலேயே சிலர் பயப் பிராந்தி கொண்டு விட்டார்கள். அதன் பேரில் மர்மம் இன்னதென்பதைக் கண்டறியத் தீர்மானித்தேன். ஒரு நாள் இரவு அந்த ஓலம் வந்த திசையை நோக்கி நானும் சில வீரர்களும் சென்றோம். புதர் மறைவிலிருந்து ஒரு ஸ்திரீ உருவம் வெளிப்பட்டது. ஒரு கண நேரம் எங்களைப் பார்த்துவிட்டுத் திகைத்து நின்றது. மறுபடியும் ஓடத் தொடங்கியது. எல்லாருமாகத்துரத்திச் சென்றால், அந்த உருவத்தைப் பிடிக்க முடியாது என்று என் மனத்துக்குள் ஒரு குரல் கூறியது. எனவே, மற்றவர்களை 'நில்லுங்கள்' என்று சொல்லி நிறுத்தி விட்டு நான்மட்டும் தொடர்ந்து ஓடினேன். ஒரு தடவை அந்த உருவம் திரும்பிப் பார்த்தது. தனி ஆளாக நான் வருவதைப் பார்த்து என்னை வர வேற்கும் பாவனையில் காத்துக் கொண்டிருந்தது. இப்பொழுது எனக்கும் தில்லாய்த்தான் போய் விட்டது. ஒரு விநாடி நேரம் தயங்கி நின்றேன். மறுபடியும் நெஞ்சை உறுதிப்படுத்திக் கொண்டு முன்னால் சென்று அந்தப் பெண் உருவத்தை நெருங்கினேன். நிலா வெளிச்சம் அவள் முகத்தில் நன்றாக விழுந்தது. தெய்வீகமான அம் முகத்தில் புன்னகை அரும்பி யிருந்தது. அந்தக் கணத்தில் எனக்கு நினைவு வந்துவிட்டது. காவேரி அம்மன் இவள்தான்! என்னை வெள்ளம் அடித்துப் போகாமல் காப்பாற்றிய தெய்வ மங்கை இவள் தான்!... சற்று நேரம் பிரமை பிடித்தவன் போல் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு 'தாயே! நீ யார்? இங்கே எப்போது வந்தாய்? எதற்காக வந்தாய்? உன்னை எத்தனையோ காலமாக நான் தேடிக்கொண்டிருந்தேனே? என்னைப் பார்க்க விரும்பினால் நேரே என்னிடம் வருவதற்கென்ன? இந்தத் தாவடியைச் சுற்றி ஏன் வட்டமிடுகிறாய்? ஏன் புலம்புகிறாய்?' என்று அலறினேன். அந்த மாதரசி மறுமொழி சொல்லவில்லை. மீண்டும் மீண்டும் நான் கேட்டும் பயனில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுடைய கண்களில் கண்ணீர் பெருகத் தொடங்கியது. அந்தக் கண்ணீர் என் நெஞ்சைப் பிளந்தது. அவள் ஏதோ சொல்ல முயன்றாள் என்று தோன்றியது. ஆனால் வார்த்தை ஒன்றும் வரவில்லை. உருத் தெரியாத சப்தம் ஏதோ அவள் தொண்டையிலிருந்து வந்தது. அப்போது சட்டென்று எனக்குத் தெரிந்து விட்டது, அவள் பேசும் சக்தி இல்லாத ஊமை என்று. அப்போது நான் அடைந்த வேதனையைப் போல் என்றும் அடைந்ததில்லை. இன்னது செய்வதென்று தெரியாமல் நான் செயலற்று நின்றேன். அந்த ஸ்திரீ சட்டென்று என்னைக் கட்டித் தழுவி உச்சி மோந்தாள். அவள் கண்ணீர்த் துளிகள் என் தலையில் விழுந்தன. உடனே, அடுத்த கணத்திலேயே என்னை விட்டு விட்டு ஓடினாள். திரும்பிப் பார்க்கவும் இல்லை.



நானும் அவளைத் தொடர்ந்து செல்ல முயலவில்லை. பாசறைக்குச் சென்றதும் என்னை ஆவலோடு சூழ்ந்து கொண்டு கேட்ட வீரர்களிடம், 'அவள் பேயும் அல்ல; பிசாசும் அல்ல; சாதாரண ஸ்திரீதான்! வாழ்க்கையில் ஏதோ பெருந் துயரத்தினால் ஏதோ சித்தப் பிரமை கொண்டிருக்கிறாள். மறுபடியும் அவள் வந்தால் அவளைத் தொடர்ந்து போய்த் தொந்தரவு செய்யாதீர்கள்!' என்று கண்டிப்பாகக் கட்டளை யிட்டேன்.

"மறுநாள் முழுவதும் அங்கிருந்து தாவடியைக் கிளப்பிக் கொண்டு போய் விடலாமா என்ற யோசனை அடிக்கடி எனக்குத் தோன்றி வந்தது. ஆனாலும் முடிவு செய்யக் கூடவில்லை. ஒருவேளை மறுபடியும் அந்த ஸ்திரீ வரக்கூடும் என்ற ஆசை மனத்துக்குள் இருந்தது. இத்தகைய யோசனையிலேயே பொழுதும் போய்விட்டது. இரவு வந்தது.



## எலிகளை விரட்ட டெலிவிஷன்!

எலிகளின் தொந்தரவு இருக்கும் ஒரு வீட்டில் ஒரு டெலிவிஷன் 'செட்'டை வைத்தால் எலிகள் ஓடிவிடுமாம்! தெற்கு ரஷ்யாவில் உள்ள ரோஸ் டோன்டன் என்ற கிராமத்தில் நடந்த ஒரு சம்பவம் இதை நிரூபித்திருக்கிறது. ஒரு விஞ்ஞானப் பேராசிரியர் அதற்குப் பின்வருமாறு விளக்கம் கூறுகிறார். ''இலேசான 'எக்ஸ்ரே' கதிர்கள் மனிதனுக்கு எந்தத் தீங்கும் உண்டு பண்ணுது. ஆனால் எலிகளுக்கு அவை தீங்கு விளைவிக்கும். டெலிவிஷன் 'செட்டி'லிருந்து பலஹீனமான எக்ஸ்ரே கதிர் அலைகள் வெளியாகின்றன. அவைதான் எலிகளை வீட்டிலிருந்து விரட்டியடிக்கின்றன!''

ஆதாரம்: ''டெக்கான் ஹெரால்ட்''
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

---

நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. தாவடிக்கு அருகில் அந்த ஓலக் குரல் கேட்டது. நான் மற்ற வீரர்களிடம் என்னைப் பின்தொடர்ந்து வர வேண்டாம் என்று சொல்லிவிட்டுக் குரல் கேட்ட இடத்தை நோக்கிப் போனேன். அந்தப் பெண்ணரசி என்னை முதல் நாள் பார்த்த மாதிரியே புன்னகையுடன் வரவேற்றாள். சிறிது நேரம் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஏதோ சொல்ல முயன்றாள். எனக்கு விளங்கவில்லை.

''பிறகு என் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனாள். அவளுடன் போவதற்கு எனக்குக் கொஞ்சம் கூடத் தயக்கம் உண்டாகவில்லை. காட்டுவழியில் போகும்போது முள் செடிகளின் கிளைகள் என்மீது படாத வண்ணம் அவள் விலக்கி விட்டுக் கொண்டு போனது என் நெஞ்சை உருக்கியது. கொஞ்ச தூரம் போன பிறகு ஒரு குடிசை தென்பட்டது. அந்தக் குடிசைக்குள் ஓர் அகல் விளக்கு மினுக்கு மினுக்கு என்று எரிந்தது. அந்த வெளிச்சத்தில் அங்கே படுத்திருந்த கிழவன் ஒருவனைக் கண்டேன். அவன் உடம்பெல்லாம் பொறுக்க முடியாத குளிரினால் நடுங்குவது போல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் உடம்பையே சில சமயம் தூக்கித் தூக்கிப் போட்டது. பற்கள் கிட்டிப் போயிருந்தன. கண்கள் சிவந்து தணல்களைப் போல் அனல் வீசின. ஏதேதோ உருத் தெரியாத வார்த்தைகளை அவன் பிதற்றிக் கொண்டிருந்தான்...

''உங்களுக்கு நினைவில் இருக்கிறதா? இன்று பாதாளக் குகையில் நாம் பார்த்த மகாபோதி விஹாரத்தில் ஒரு பிக்ஷு நடுங்கிக் கொண்டிருந்தாரல்லவா? அவர் பேரில் தேவர்கள் ஆவிர்ப்பவித்திருந்ததாகச் சொன்னார்கள் அல்லவா? அப்போது எனக்குக் காட்டின் மத்தியில் குடிசையில் பார்த்த கிழவன் ஞாபகம் வந்தது. அந்தப் பிக்ஷுவின் பேரில் தேவர்கள் ஆவிர்ப்பவித்திருக்கிறார்களா? அல்லது நடுக்கு சுரம் என்னும் கொடிய நோய் ஆவிர்ப்பவித்திருக்கிறதா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அதைப் பற்றி நான் பிரஸ்தாபிக்கவில்லை. ஏன் பிரஸ்தாபிக்க வேண்டும்! ஏன் அந்தப் பக்திமான்களின் நம்பிக்கையைக் கெடுக்க வேண்டும்? இந்த வருஷத்தில் இந்தப் பெரஹராத் திருவிழா நடப்பதற்கு அனுமதி கொடுத்தேனே, ஒரு விதத்தில் பெரிய தவறு செய்து விட்டேன் என்று தோன்றுகிறது. ஏற்கனவே பாதிக்கு மேல் அழிந்து போயிருக்கும் இந்தப் புராதன நகரத்துக்குக் குளிர் காய்ச்சலும் வந்துவிட்டால் என்ன கதி ஆவது? மிச்சமிருக்கும் ஜனங்களும் இங்கிருந்து ஓட வேண்டியதுதான்...''

இவ்வாறு சொல்லி அருள்மொழி வர்மர் ஏதோ யோசனையில் ஆழ்ந்தார்.

சற்றுப் பொறுத்துப் பார்த்துவிட்டு வந்தியத் தேவன், ''ஐயா! இந்த நகரம் எப்படியாவது போகட்டும். குடிசையில் பிறகு என்ன நடந்தது? சொல்லுங்கள்!'' என்றான்.

''குடிசையில் ஒன்றும் நடக்கவில்லை. அந்த மாதரசி நான் அதிக நேரம் அங்கு நிற்கக் கூடாது என்று கருதினாள் போலிருக்கிறது. உடனே என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியில் வந்துவிட்டாள். பிறகு, சில சமிக்ஞைகளின் மூலம் தான் சொல்ல விரும்பியதைச் சொன்னாள். அவள் சொல்ல விரும்பியது என்னவென்பதை என் மனம் தெரிந்து கொண்டுவிட்டது. 'இந்தப் பிரதேசத்தில் இருக்க வேண்டாம். இங்கே இருந்தால் இந்தக் குளிர் காய்ச்சல் நோய் வந்துவிடும். உடனே இங்கிருந்து தாவடியைப் பெயர்த்துக் கொண்டு போய்விடு!' என்று அவள் சமிக்ஞைகளின் மூலமாகச் சொல்லி என்னையும் தெரிந்து கொள்ளச் செய்து விட்டாள். என் பேரில் அவளுக்குள்ள அளவில்லாத அன்பின் காரணமாகவே இந்த எச்சரிக்கை செய்ததாகவும் அறிந்து கொண்டேன். தெய்வத்தின் எச்சரிக்கையாகவே அதை எடுத்துக் கொண்டு அன்றிரவே தாவடியை அங்கிருந்து கிளப்பும்படி கட்டளையிட்டேன். என்னுடனிருந்த வீரர்களுக்கும் அது மகிழ்ச்சியை உண்டாக்கிற்று. அந்தப் பயங்கரமான ஓலக் குரலை இனிக் கேட்க வேண்டாம் என்று எண்ணி அவர்கள் உற்சாகமடைந்தார்கள்....''

(தொடரும்)

## பரவசமாக்கும் பரிமளகந்தம்-பிளாக் ரோஸ்
## கோயா தயாரிக்கும் ஒரு அழகு சாதன பௌடர்

கோயா பிளாக் ரோஸின் சுகந்தச் சுழலில
அகபபட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் வெளிவரும்
போது பெண்மை சிறக்கும். வாசனை மணக்கும்.
உள்ளம் உவக்கும். எல்லாம் நீங்கள் விரும்பிய விதமே
இங்கிதமறிந்த மங்கை எந்தபபணிக்கும் தயார்.
மூன்று இதர கோயா சிருஷ்டிகள்: புதிய சிருங்கார
சாதனம் லவ் அஃபேர், புது மலர் மணமுள்ள
கார்டீனியா, பரவசமூட்டும் பாஸ்போர்ட்.
உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும்
புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கும்.




இந்த நறுமணப் பௌடர்களைத்
தயாரிப்போர்: **கோயா**



AGC-8 TAM

பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்)
லிமிடெட் (இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)



# ராமாயணம்

## ராஜாஜி

### 18. கைகேயி

ராஜகுல அந்தப்புர வழக்கத்தை அனுசரித்து, கைகேயிக்குத் தோழியும் அந்தரங்க வேலைக்காரியுமாக ஒரு கூனியம்மை எங்கிருந்தோ வந்து சேர்ந்திருந்தாள். எஜமானி கைகேயிக்கு இவள் கொஞ்சம் சொந்தம்கூட; அதனால் நெருங்கிப் பழகும் உரிமையைக் கொண்டாடி வந்தாள். இவள் பெயர் மந்தரை. ராமாயணக் கதையில் மிகப் பிரசித்தி பெற்ற பாத்திரம். நம் நாட்டு மக்கள் அனைவரும், ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் வெறுக்கும் பாத்திரம். இவளே ராமனைக் காட்டுக்கு அனுப்பச் செய்தவள். இவள் என்ன செய்தாள், எப்படிச் செய்தாள் என்பதை விவரமாக இனிப் பார்க்கலாம்.

அந்தப்புரத்து மேல் மாடியிலிருந்து மந்தரை பார்த்தபோது தெருவெல்லாம் தண்ணீர் தெளித்து அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. ஜனங்கள் தங்கள் வீடுகளின் மேல் பலவித அழகிய கொடிகள் பறக்க விட்டிருந்தார்கள். ஆடை, அணிகள் பூண்டு, சந்தனம் பூசி, புஷ்பம் அணிந்து, எங்கே பார்த்தாலும் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் ஏதோ பேசிக் கொண்டு மிகச் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்தாள். கோயில்களில் எல்லாம் வாத்திய கோஷம். ஏதோ பெரிய மங்கள உற்சவம் நடக்கப் போவதாகத் தெரிந்தது.

மந்தரை, பக்கத்தில் நின்ற அந்தப்புர வேலைக்காரியைப் பார்த்து, ''என்ன நீ பட்டு உடுத்தியிருக்கிறாய்? என்ன விசேஷம் ஊரில்? கௌசல்யா தேவி பிராமணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறதே! பணத்தைச் சாதாரணமாக வீண் செலவு செய்ய மாட்டாளே! எங்கே பார்த்தாலும் திருவிழா வாத்தியமும் அலங்காரமுமாக இருக்கிறதே! உனக்கு ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டாள்.

''உனக்குத் தெரியாதா? நம் ராமசந்திரனுக்கு நாளைக் காலை யுவராஜ பட்டாபிஷேகம்'' என்று அந்த வேலைக்காரச் சிறுமி சொல்லிக் கொண்டாடினாள்.

இதைக் கேட்டதும் மந்தரைக்கு அடங்காத கோபம் மேலிட்டது. மிக வேகமாகக் கீழே இறங்கினாள். நேராகக் கைகேயியின் அறைக்குச் சென்றாள். அப்போது கைகேயி படுத்திருந்தாள்.

''மூடப் பெண்ணே! எழுந்திரு! எழுந்திரு! தலைக்குமேல் பெரிய வெள்ளம் வருகிறது. நீ மோசம் போனாய். மூடப் பெண்ணே, தூங்குகிறாயே!'' என்றாள்.

மந்தரையின் துக்கத்தைப் பார்த்து அவளுக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ என்று கைகேயி எண்ணி, ''மந்தரை, உனக்கு என்ன துயரம் ஏற்பட்டது? ஏன் இப்படித் துக்கப்படுகிறாய்?'' என்று மெதுவாகக் கேட்டாள்.

மிகக் கெட்டிக்காரி மந்தரை பேச ஆரம்பித்தாள்.

''உனக்கும் எனக்கும் நாசம் வந்து விட்டது, பெண்ணே! ராமனை யுவராஜனாகச் செய்து விட்டான். இதற்கு மேல் எனக்கு என்ன துக்கம் வேண்டும்? உனக்குத் துக்கம் வந்தால் நான் எப்படிச் சும்மா இருக்க முடியும்? ஓடி வந்தேன். அரச குலத்தில் பிறந்து வளர்ந்தாய்; மகாராஜனுடைய வீட்டில் அரசியாகவும் புகுந்தாய். ஐயோ! கெட்டுப் போனாயே! ஒன்றும் அறியாத அப்பாவிப் பெண்ணாயிருக்கிறாய். இனிய மொழிகள் பேசிப் பேசி உன் புருஷன் உன்னை ஏமாற்றியேவிட்டான். வஞ்சனைக்காரன், எல்லாம் கௌசல்யைக்குக் கொடுத்து விட்டு, உன்னைத் தெருவில் இண்டாட விட்டு விட்டான் மோசக்காரன். பரதனை, 'மாமன் வீட்டுக்குப் போ' என்று சொல்லி வெகு தூர தேசத்துக்கு அனுப்பி விட்டு, இங்கே அவசரம் அவசரமாக ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் போகிறான். நாளைக்கே எல்லாம் முடிந்து விடப் போகிறது. நீயோ எல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா படுத்துக் கிடக்கிறாய். நீயும், உன்னை நம்பியிருக்கிற எல்லோரும் அழிந்தீர்கள்.''

இப்படி மந்தரை அடுக்கிக் கொண்டே போனாள். கைகேயிக்கு இந்தப் பேச்சு காதில் பட்டதேயொழிய அதன் பொருளில் கவனம் செல்லவில்லை. அவள் ஒன்றே ஒன்றைத் தான் கவனித்தாள். அதாவது ராமனுக்குப் பட்டாபிஷேக மகோற்சவம் நடக்கப் போகிறது என்பதைத்தான்.

''என் குமாரன் ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்கிற செய்தியைக் கொண்டு வந்தாய். மந்தரா! இதை விட என்ன சந்தோஷம் எனக்கு? இந்தா, இதைப் பெற்றுக் கொள்! இன்னும் என்ன வேண்டுமோ கேள்'' என்று தன் கழுத்திலிருந்த மாலையை எடுத்து மந்தரைக்குக் கொடுத்தாள். மங்களச் செய்தி கொண்டு வந்தவர்களுக்கு ஏதாவது பொருள் உடனே தருவது ராஜகுல வழக்கம்.

மந்தரை வீணாகப் பயப்படுகிறாள். அவள் ஒரு வேலைக்காரிதானே! பெரிய வீட்டு விஷயங்களை அவளால் தெரிந்து கொள்ள முடியாது. அவளுடைய மூட பயத்தைப் போக்கி, தைரியம் உண்டாக்க ஆபரணத்தை அவளுக்குத் தந்து தன் மகிழ்ச்சியை அவளும் அடையச் செய்யலாம் என்று கைகேயி எண்ணினாள்.

கைகேயினுடைய உள்ளம் எளிதில் கெடவில்லை. நல்ல பண்பாடு பெற்றவள். தாழ்ந்த புத்திக்கு உடனே இடம் கொடுக்கவில்லை. மந்தரைக்கோ இதைக் கண்டு துக்கம் இன்னும் அதிகரித்தது.

கைகேயி தந்த மாலையை அப்படியே வீசி எறிந்து விட்டு, மந்தரை ''ஐயோ பைத்தியக்காரி! தலைக்கு மேல் வந்திருக்கிறது வெள்ளம். மடப்பெண்ணே! நீயோ ஹா ஹா என்று சிரித்து மகிழ்கிறாய். தீராத கஷ்டம் வந்து உன் வாழ்க்கையைக் கவிழ்ப்பதற்கு நிற்கும் போது நீ கண்ணை மூடிக் கொண்டிருக்கிறாய்! உன்னைப் பார்த்து நான் சிரிக்கவா, அழவா? உன் சக்களத்தியானவள் தன் மகன் பட்டத்துக்கு வர ஏற்பாடு செய்து விட்டாள். நீ இது வெகு மங்களம் என்று கூத்தாடுகிறாய். உன் மதியை நான் என்னென்று சொல்வேன்? ராமன் பட்டம் பெற்ற பின் பரதன் நிலை என்ன? பரதன் இருக்கும் வரையில் தனக்கு என்றைக்குமே அபாயம் என்று ராமன் எண்ணுவான் அல்லவா? இயற்கையின் போக்கு ராமனுக்குத் தெரியும். ஆனபடியால் பரதன் ராமனுக்குப் பகையாகி விட்டான். பயத்தினால்தான் விரோதிகளை அரசர்கள் கொல்லுவது. ராமன் பட்டம் பெற்ற பின் பரதனைக் கண்டு அவன் பயப்படுவான். பயத்தினால் அல்லவோ பாம்புகளைக் கண்டவுடன் கொல்லுகிறோம். பரதன் உயிரைப் பற்றி இனிமேல் சந்தேகப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டியதாகும். நாளைப் பொழுது விடிந்ததும் கௌசல்யை பாக்கியவதியானாள். நீ அவளுக்குத் தாசியானாய். அவள் முன் கைகூப்பி வணங்கி ஒரு வேலைக்காரியாக நிற்பாய். நாளை முதல் உன் மகனுடைய சுதந்திரமும் முடிந்தது. அவன் இராமனுக்கு ஒரு சாதாரண வேலைக்காரன். நம்முடைய அந்தப்புரத்தில் இனி மானம், சந்தோஷம் என்பது இல்லை'' என்று சொல்லித் துக்கத்தினால் மேலே பேச முடியாமல் நிறுத்தினாள்.

கைகேயி இதை யெல்லாம் கேட்டு உண்மையில் வியப்படைந்தாள். 'ஏன் இவ்வாறு பயப்படுகிறாள், மந்தரை? ராமனுடைய குணம் இவளுக்குத்தெரியாதா?

தருமமே வடிவம் கொண்டவன் அல்லவா அவன்?' என்று எண்ணினாள்.

''மந்தரை ராமனுடைய சத்தியம், சீலம், அடக்கம் இவற்றை நாம் எல்லோரும் கண்டு மகிழ்ந்தோம் அல்லவா? அவன் மூத்தவன். ராஜ்யம் அடைகிறான். அவனுக்குப் பிறகு பரதன் அடையப் போகிறான். இதில் என்ன கெட்டுப் போச்சு? ஏன், தோழி, நீ வருத்தப்படுகிறாய்? ராமனுக்குப் பிறகு நூறு வருஷம் பரதனும் அரசனாகி வாழ்வான். அழாதே. துக்கப்படாதே! ராமன் என்னிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறான்! தன்னைப் பெற்றவளிடம் கூட அவ்வளவு பிரியம் அவனுக்கு இல்லையே? தன் தம்பி ஒவ்வொருவனையும் தன் உயிராகவே அல்லவோ ராமன் கருதி வருகிறான்? அவனைப்பற்றி நீ பயப்படுவது சரியே அல்ல'' என்று சொல்லி, இயற்கை அன்புடன், கைகேயி மந்தரையின் பயத்தைத் தணிக்கப் பார்த்தாள்.

''ஐயோ, உன் புத்திக்கு நான் என்ன சொல்வேன்? ஏன் உன் மூளை இப்படிக் கெட்டுப் போயிற்று? ராமன் அரசனாக அபிஷேகமான பின் பரதனுக்கு ஏது இடம்? ராஜ குல வழக்கம் உனக்குக் கொஞ்சமும் தெரியவேயில்லை. ராமன் சிம்மாசனம் ஏறினால் அத்துடன் பரதனுடைய ராஜ வாழ்க்கை முடிந்தது. ராமனுக்குப் பிறகு அவனுடைய மூத்த மகன், அவனுக்குப் பிறகு அவனுடைய மூத்த மகன், இப்படித்தான் உரிமை செல்லும். தம்பியைப் பற்றிப் பேச்சே கிடையாது. மூத்த மகன் மூத்த மகனாகவே சங்கிலி கோத்த வரிசைக் கிரமமாகப் போகும். தம்பி எவ்வளவு குணவானாக இருந்தாலும், அவனுக்கு இடமில்லை. இதுவே ராஜ குல வரிசைக் கிரமம். ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்து முடித்த பின் உன் மகன் அநாதையாவான். ராஜ வம்சத்தில் அவனுக்காவது அவன் மக்களுக்காவது இடமில்லை. இது உனக்குத் தெரியவில்லையே. என் கண்மணி! நான் என்ன செய்வேன்?

''ராமன் பட்டம் பெற்ற பின் அவன் பரதனைச் சும்மா விட மாட்டான். பரதன் உயிருக்கும் ஆபத்து உண்டாகும். பரதன் உயிருடன் இருக்க நீ வேண்டினாயானால் அவன் மாமன் வீட்டிலிருந்தே எங்கேயாவது போய், மறைந்து க்ஷேமமாக இருக்கட்டும். இங்கே வந்தால் அவனுக்கு ஆபத்தே உண்டாகும். கௌசல்யைக்கு உன் மேல் மிகக் கோபம். அரசனுடைய பிரீதியை நீ சம்பாதித்திருப்பதாக எண்ணி நீ அவளைப் பலதடவை அலட்சியம் செய்திருக்கிறாய். இப்போது பழி வாங்குவாள் நிச்சயம். சக்களத்தியின் கோபம் மிகப் பொல்லாதது. ராமன் பட்டமடைந்தால் நம்முடைய பரதன் செத்தான் என்றே வைத்துக் கொள். ஆனபடியால் உறுதியாகத் தீர்மானிப்பாய். எப்படியாவது பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். ராமனை ராஜ்யத்திலிருந்து வெளியேற்றி விட வேண்டும்.''

இவ்வாறு முடித்தாள் மந்தரை. கைகேயியின் உள்ளத்தில் பயம் புகுந்து கொண்டது. மந்தரை வெற்றியடைந்து விட்டாள். கிளி பிடித்த கைகேயியின் முகம் சிவந்து போய்ச் சுவாசம் வெப்பமடைந்தது. இன்னது செய்வதென்று தெரியாமல் மந்தரையிடம் தஞ்சமடைந்து பேச ஆரம்பித்தாள்.

புத்திர பாக்கியம் பெறுமலிருந்த காலத்தில் கைகேயியைத் தசரதன் ராஜ குல வழக்கத்தை அனுசரித்து விவாகம் செய்து கொண்டான். அந்தச் சமயம் கைகேயியினுடைய தந்தை கேகய ராஜன் தசரதனிடம் வாக்குறுதி பெற்றான். — இவள் வயிற்றில் பிறக்கும் மகனுக்குப் பட்டம் என்று. இப்படி அப்போது சொன்னதில் ஒன்றும் வியப்போ, வித்தியாசமோ இருந்திருக்க இடமில்லை. அப்போது யாருக்குமே குழந்தை இல்லை. மற்ற மனைவிகளுக்குப் புத்திரப் பேறு உண்டாகவில்லை. புத்திரப் பேற்றுக்கு ஆசைப்பட்டே மூன்றாவது மனைவியைக் கொண்டது. அந்த ஆசையும் நிறைவேறவில்லை. வெகு நாட்கள் கழிந்து யாகம் செய்து மூன்று மனைவிகளும் குழந்தை பெற்றார்கள். பட்டமகிஷியின் மகனான ராமன் நான்கு புத்திரர்களுக்குள் மூத்தவனாகவும், சகல உத்தம குணங்களையுடையவனாகவும், ராஜ்ய பாரம் வகிக்கும் தகுதியைக் கொண்டவனாகவும் மந்திரிமார்கள், நகரத்தார், கிராமவாசிகள், சிற்றரசர்கள் அனைவரும் யுவராஜ பதவிக்குத் தகுந்தவன் என்று சொல்லும்படி அவர்களுடைய அன்பைச் சம்பாதித்தவனாகவும் இருக்க, எப்படி அவனுடைய உரிமையையும் ராஜ குல முறையையும் புறக்கணித்துப் பரதனுக்குப் பட்டாபிஷேகம்செய்வது நியாயமாகும்? தவிர, பரதனும் கைகேயியும் இதைப் பற்றி ஏதொரு ஆசை அல்லது எண்ணம் கூட வைத்தது கிடையாது. அதைப் பற்றிப் பேச்சே கிடையாது. ஆனபடியால் முறைப்படி ராமனை யுவராஜபதவியில் அமர்த்துவதில் ஒரு சிக்கலும் ஏற்படாது என்று அரசன் எண்ணினான். அவ்வாறே கைகேயியின் உள்ளத்திலும் ஏதொரு

கல்மஷமும் இருக்கவில்லை. இது கைகேயியின் நடவடிக்கைகளினால் வியக்தமாகத் தெரிகிறது. பரதன் உள்ளத்தைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. ஆயினும் தசரதன் ராமனிடம் சொன்னதைப் போல் நல்லவர்களுடைய தூய சிந்தையும் திடீர் என்றுதிரிந்து போகும். கெட்டவர்களுடைய துர்புத்தியும் அதனோடு விதியும் சேர்ந்து விட்டால் யாருமே கெட்டுப் போகலாம். இதுவே கைகேயி விஷயத்தில் நடந்து விட்டது.

தீய மந்தரை இவ்வுரை
செப்பலும் தேவி
தூய சிந்தையும் திரிந்தது;
சூழ்ச்சியின் அரக்கர்
மாய, வானவர் பெற்றநல்
வரம்உண்மை யாலும்
ஆய அந்தணர் இயற்றிய
அருந்தவத் தாலும்

என்று பாடுகிறார் கம்பர். தாமதப்பட்டால் ஒருவேளை இடையூறு ஏற்படும் என்று எந்தக் காரணத்துக்காக பரதன் வருவதை எதிர்பாராமல் பட்டாபிஷேகம் முடித்துவிடலாம் என்று தசரதன் அவசரப்பட்டானோ, அதே காரணமும், அதே அவசரமும் கைகேயியின் சித்தத்தைக் கோணல் வழியில் செலுத்த மந்தரைக்கு நன்றாக உபயோகப்பட்டு விட்டன.

"பார், இவ்வளவு அவசரம் ஏன்? உன் மகன் ஊரில் இல்லாத சமயத்தில் அவனை மோசம் செய்யவே இந்த அவசர ஏற்பாடு எல்லாம்! காதல் வேஷம் போடும் உன் அரசனுடைய வஞ்சகச் சமத்காரத்தைப் பார்!" என்றாள்.

மந்தரை கைகேயியினுடைய உள்ளத்தைக் கெடுத்துத் தன் ஆலோசனைக்குச் சம்மதிக்கச் செய்து விட்டாள். மொத்தத்தில் கைகேயியினுடைய சுபாவம் சாதாரண ஸ்திரீ சுபாவம். நல்ல உணர்ச்சியும் பண்பாடும் உண்டு. கூர்மையான புத்தியும் உண்டு. ஆனால் லோக விவகாரம் அதிகமாக அறிந்தவள் அல்ல. பிடிவாதம் அதிகம். எளிதில் ஏமாற்றப்பட்டாள். செய்யும் காரியத்தின் முழுப் பயனை ஊகித்து அறியும் ஆற்றல் பெற்றிருக்கவில்லை. ராமாயணச் சங்கடப் படலம் ஆரம்பித்து விட்டது. (தொடரும்)

# விண்வெளி வீதியில் விசித்திர வாழ்க்கை

சந்திரனை நோக்கிச் செல்லும் விண்வெளி வீரர்கள் தம் பயணத்துக்கெனப் பிரத்தியேக விண்வெளி உடையை அணிந்திருப்பர். இந்த உடை சந்திரனின் அதிக வெப்ப நிலையையும் அதிக குளிரையும் தாங்கும் சக்தி வாய்ந்தது. இது 183 பவுண்டு எடையுள்ள வெண்ணிற ஆடையாகும்.

இந்த உடை மூன்று அடுக்குகளைக் கொண்டது. விண்வெளிப் பயணிகளின் உடலை யொட்டியுள்ள முதலாவது பகுதி மெல்லிய



குழாய்கள் தாங்கிய நைலான் வலையி லானது. உடையின் முதுகுப்புறம் அமைந்திருக்கும் பெட்டியிலிருந்து நீர் இந்தக் குழாய்களில் ஓடிக் கொண்டேயிருக்கும். இதன் காரணமாகப் பயணியின் உடல் எப்பொழுதும் ஒரே குளிர்ந்த நிலையிலிருக்கும்.

அதற்கு மேல் உள்ள இரண்டாவது பகுதி பயணியின் தலையையும் கையையும் தவிர உடலின் மற்ற எல்லாப் பாகங்களையும் மூடியிருக்கும். இந்தப் பகுதியும் மூன்றடுக்குப் பகுதிகளாலானது. முதலில் சாதாரண மெல்லிய மிருதுவான துணிப் பாகமும் அதற்கு மேல் காற்றுப் பை போன்ற பாகமும் இருக்கிறது. அதை யடுத்த பகுதி விண்வெளி உடை அழுக்கத்தினால், சுருங்கி அல்லது விரிந்து உருமாறி விடாமல் இருக்க வகை செய்கிறது. தவிர இதில் மெல்லிய குழாய்களும் இருக்கின்றன. இவை சுவாசிப்பதற்கான பிராணவாயுவையும் முன்னர் குறிப்பிட்ட உட் பகுதிக்கு நீரை எடுத்துச் செல்லவும் உதவுகின்றன. தவிர பயணிகளின் உடலிலிருந்து கழியும் சிறுநீரை அப்பாலோ கலத்தின் உடல் கழிவுப் பொருள் சேமிப்புப் பகுதிக்கு எடுத்துச் செல்லவும் தனிக் குழாய்கள் உடையோடு ஒட்டினாற்போல் அமைந்துள்ளன.

ஆடையின் வெளிப்புறம் உள்ள மூன்றாவது பகுதி வெண்ணிற, தீப்பற்றாத பொருளாலானது. இப்பகுதிக்கு சந்திரனின் நிலப் பரப்பில் தாக்கும் நுண்ணிய எரிநட்சத்திரக் கற்களால் சேதம் எதுவும் ஏற்படுவதில்லை.

பயணி தம் தலையில் விசேஷத் தயாரிப்பான கவசத்தை அணிந்து கொள்வார். அக்கவசம் கழுத்து வரையுள்ள ஆடையின் பகுதியுடன் ஓர் அலுமினிய வளையத்தால் காற்றுப் புகாமல் பொருத்தப்படுகிறது.

பயணிகள் கைகளிலும் கால்களிலும் பிரத்தியேகமான உறைகளை (Gloves) அணிந்து கொள்வர். அவை சூட்டினாலும் சந்திர நிலப்பரப்பில் உள்ள கூரிய கற்களாலும் பாதிக்கப்படுவதில்லை. ஆடையின் முதுகுப் புறமுள்ள ஒரு பெட்டி பயணிக்குத் தேவையான பிராணவாயுவை அளித்து உதவுகிறது.

பயணிகள் பூமியில் உள்ளவர்களுடன் தொடர்பு கொள்ள ஒலிக் கருவிகள் அவர்கள் அணியும் தலைக் கவசத்துக்குள் இருக்கின்றன.

விண்வெளி உடையை அணியுமுன் பயணிகளின் மார்பு, கை, கால் முதலிய இடங்களில் Sensor என்ற நுண்ணிய கருவிகள் பொருத்தப்படுகின்றன. இவை பயணியின் இருதயத் துடிப்பு, சுவாசம் முதலிய பல உடல் நிலை விவரங்களைக் கணக்கிடுகின்றன. இந்த அளவுகள் விண் கலத்தின் ஒரு பகுதிக்குத் தாமாகவே பயணப்பட்டு, அங்கிருந்து ரேடியோ மூலம் பூமியில் கண்காணிப்பு நிலையங்களில் உள்ள வைத்தியர்களுக்கும் இஞ்சினியர்களுக்கும் அறிவிக்கப்படுகின்றன. இதன் காரணமாக அமெரிக்காவில் ஹூஸ்டன் நகரிலுள்ள பிரதான கண்காணிப்பு நிலைய டாக்டர்களுக்கும் இஞ்சினியர்களுக்கும் பயணிகளின் உடல் நிலை பற்றிய விவரங்கள் விநாடிக்கு விநாடி தெரிய வரும்.

அப்பாலோ கலத்துக்குள் பிரயாணம் செய்வோரின் வாழ்க்கை விசித்திரமானதாகும். ராக்கெட் மூலம் மேலே தள்ளப்பட்டுச் சந்திரனை நோக்கிய பாதையில் தம் கலத்தைச் செலுத்தியவுடன் பயணிகள் தமது விண்வெளி ஆடையைக் களைந்து விட்டுச் சுகமான சாதாரண ஆடையில் இருப்பர். கழுத்திலிருந்து கால்வரை உள்ள ஒரே உடை இது.

அப்பாலோ கலத்துக்குள் ஒவ்வொரு பயணிக்கும் இருக்கும் இடம் சுமார் 73 கன அடிதான். இது ஒரு சாதாரண மோட்டார் காரில் உள்ளதை விட 10 கன அடி அதிகம். பயணிகள் உண்பது, உறங்குவது எல்லாம் இந்த இடத்தில்தான்.

அப்பாலோ கலம், வாயு மண்டலத்தைத் தாண்டிப் பூமியின் ஆகர்ஷண சக்தி பாதிக்காத உயரத்துக்குச் சென்றவுடன், பளுவில்லாத ஒரு நிலையை அடைகிறது. அதே சமயம் கலத்திலிருக்கும் பயணிகள் மட்டுமின்றி எல்லாப் பொருள்களுமே கனமற்ற நிலையை அடைகின்றன. பயணிகள் கலத்துக்குள் மிதந்து கொண்டிருப்பர். இதைப் ''பளுவில்லாத் தன்மை'' (Weightlessness) என்பர். இம்மாதிரி நிலையில் ஒரு டம்ளரிலிருந்து ஜலத்தைக் கவிழ்த்தா ஜலம் கீழே விழாமல், சிறிய அல்லது பெரிய துளிகளாக மிதந்து கொண்டிருக்கும்! இத்தன்மைக்குத் தக்கபடி பயணத்துக்குத் தேவையான விண்வெளி உணவு தயாரிக்கப்பட்டுக் கலத்துக்குள் அதற்கான பிரத்தியேக அறையில் வைக்கப்பட்டிருக்கும். இத்தகைய உணவு, சூனிய நிலையில் அடைக்கப்பட்டு பிளாஸ்டிக் பைகளில் வைக்கப்பட்டிருக்கும். பல பைகள் கொண்டது ஒரு வேளை உணவாகும். இவ்விதம் தயாரிக்கப்பட்டுப் பைகளில் அடைக்

1. அப்பாலோ – 11 விண்வெளி யாத்திரை திட்டம்.

2. விண்வெளி உடை.

3. விண்கலத்தின் வரைபடம்

4. விண்கலத்தினுள்ளே ஒரு தோற்றம்.

5. உணவு நிறைந்த பிளாஸ்டிக் பைகளில் துப்பாக்கி விசை மூலம் நீர் சேர்க்கப்படுகிறது. கத்திரி பிளாஸ்டிக் பையைத் திறக்க உபயோகப்படுகிறது.

ஜனார்த்தனன்

## புகைப்படக் கார்ட்டூன்!



ஆமாம், புகைப்படங்களிலேயே கார்ட்டூன்கள் தயாராகின்றன இப்போது யுகோஸ்லாவியாவில். தினசரிகள் இப்போது இந்தப் புதுமையான கார்ட்டூன்களையே விரும்பிப் பிரசுரிக்கின்றன. மாதிரிக்கு ஒன்று:

அபரிமிதமான வரிகள் பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்து வருவதாக யுகோஸ்லாவியாவில் கருத்து நிலவி வருகிறது. இதை யொட்டி மத்திய மந்திரி ஒருவர் இந்தக் கார்ட்டூனில் ''சரிந்து வரும் நாட்டின் பொருளாதாரத்தை மீண்டும் சரியாக நிலை நிறுத்த எங்கள் கைகளைக் கட்டிப் போடாமல் சுதந்திரமாக இயங்க விடுங்கள்'' என்று கேட்டுக் கொள்கிறார்.

நன்றி : யுகோஸ்லாவ் ரெவ்யூ

கப்பட்ட உணவு, அதிலின்று நீர் அகற்றப்பட்டுக் கெட்டியாக இருக்கும்.

உணவு உட்கொள்ளும் சமயத்தில் பயணிகள் அந்தந்த உணவுக்குத் தகுந்தபடி குளிர்ந்த அல்லது வெப்பமான நீரைக் குழாய்களின் மூலம் பைக்குள் பாய்ச்சி, உணவுடன் கலந்து, பையைப் பிதுக்கி உணவை உட்கொள்வர். பின்னர் காலிப் பைகளைச் சுருட்டி, கலத்தில் அதற்கான பிரத்தியேகப் பெட்டியில் போட்டு விடுவர். பயணம் முழுவதற்குமான உணவு, நாள், வேளை, நேரம் எல்லாம் குறிக்கப்பட்டு விண்கலத்தின் ஒரு பகுதியில் வைக்கப்பட்டிருக்கும். இந்த உணவு பயணிக்கு ஒரு நாளைக்கு 2,800 கலோரிகள் சக்தியை அளிக்கும். இந்த உணவை பில்ஸ்பரி கம்பெனி என்ற ஸ்தாபனம் தயாரித்து அளிக்கிறது.

பயணிகளுக்குத் தேவையான குளிர்ந்த குடி தண்ணீருக்கெனக் குழாய் வசதி அப்பாலோ கலத்தில் இருக்கிறது. சுருட்டி வைக்கப்பட்டிருக்கும் இக் குழாயின் நீளம் சுமார் ஆறு அடியாகும். குழாயின் முனையில் துப்பாக்கி போன்ற விசை இருக்கும். நீர் குடிக்க விரும்பும்போது விசையை இயக்கினால் ஓர் அவுன்ஸ் நீர் குழாயினின்று வாய்க்குள் பீச்சப்படும்.

விண்வெளிப் பயணிகள் ஒவ்வொருவராக உணவு உட்கொள்வார்கள். காரணம் விண்கலத்தின் பயணத்தைக் கவனித்துக் கொள்ள வேண்டிய அவசியம்தான்.

தவிர பயணிகள் உட்காருவதற்கென அமைந்திருக்கும் மஞ்சம் (Couch) தூங்கும் நேரத்தில் படுக்கையாக மாறி உதவும். பிரயாணத்தின் போது மல ஜலம் கழிப்பதற்கெனப் பைகளும் குழாய்களும் உபயோகப்படுத்தப்படுகின்றன. உடல் கழிவுப் பொருள்களைத் தாங்கிய பைகளைச் சேகரித்துக் கொள்வதற்கெனப் பிரத்தியேக சிறிய இடம் விண்வெளிக் கலத்தின் ஒரு பகுதியில் இருக்கிறது.

தூங்கும்போது மட்டும் பயணிகள் மூவரும் ஒரே சமயத்தில் தூங்குவர். காரணம் ஒருவர் தூங்கும்போது மற்றவர் வேலை செய்தால் உபத்திரவமாக இருக்கும் என்பதுதான். அவர்கள் தூங்கும் சமயத்தில் விண்கலத்தின் போக்கையும், பயணிகளின் உடல் நிலையையும், பூமியில் கண்காணிப்பு நிலையங்களில் உள்ள விஞ்ஞானிகளும் வைத்தியர்களும் கவனித்துக் கொள்வார்கள். அவசியம் ஏற்பட்டால் பயணிகளைத் துயில் எழுப்பவும் ஓர் எச்சரிக்கை மணி உபயோகிக்கப்படுகிறது.

விண்வெளிப் பயணிகளுக்கு அவர்களது பிரயாணத்தில் அலுப்புத் தட்டாதிருக்க அன்றாடம் தினசரிப் பத்திரிகைகளின் முதல் பக்கச் செய்திகளையும் விளையாட்டுகள் பற்றிய செய்திகளையும் ஹூஸ்டன் நகரில் உள்ள பிரதான கண்காணிப்பு நிலையத்தின் ஓர் அதிகாரி ரேடியோ அலைகளின் மூலம் தொடர்பு கொண்டு படித்துக் காட்டுவார். இதைத் தவிர பயணிகளின் குடும்பங்களைப் பற்றிய தகவல்களையும் அவர்களுக்குத் தெரிவிப்பார்.

மூன்று நாள் விண்வெளிப் பயணத்துக்குப் பின் மூன்று விண்வெளி வீரர்களில், ஆர்ம்ஸ்ட்ராங், ஆல்ட்ரின் என்ற இருவரும் சந்திரனின் நிலப்பரப்பில் மத்தியரேகைக்கு வடக்கே சிறிது கிழக்குப் புறமாக இருக்கும் சமதளப் பகுதியான ''அமைதிக் கடல்'' (Sea of Tranquility) என்ற பகுதியில் போய் இறங்குவர்.

சந்திரனில் அவர்கள் இறங்கும்போது சூரியன் உள்ள நிலையில் சந்திரனின் நிலப்பரப்பில் உள்ள குன்றுகள், குழிகள் ஆகியவற்றின் நிழல்கள் நீண்டு பெரியதாக இருக்கும். இதன் காரணமாக விண்கலம் சந்திர மண்டலத்தில் இறங்குமுன் அதன் மேடு பள்ளங்களை நன்றாகக் கண்டு அறிந்து சரியான இடத்தில் இறங்குவது சாத்தியமாகும்.

இந்தப் பயணத்துக்குத் தேவையான எல்லாக் கருவிகளையும் தயாரித்து உதவும் அமெரிக்க ஸ்தாபனங்களின் எண்ணிக்கை 20,000 ஆகும்! அந்த ஸ்தாபனங்களில் பணிபுரிபவர்களின் எண்ணிக்கை மூன்றரை லட்சத்துக்கும் மேலாகும். சென்ற பல ஆண்டுகளாக எடுக்கப்பட்டு வரும் இந்த அகர முயற்சிக்கு மொத்தச் செலவு 18,000 கோடி ரூபாய்!

காட்சி 14

(மாதாவின் தேவாலயம். ராணியின் திருமண நாள். டாக்டர் சரவணன், நல்லசிவம், வெங்கிட்டு, மேரி, ஊர் மக்கள் ஒரிருவர் முதலானோர் ஒருவர்பின் ஒருவராய்த் தேவாலயத்துக்கு வருகின்றனர். லாரன்ஸ் தமது மகளின் கரம் பற்றி அழைத்து வருகிறார். அருண் ராணியின் கரம் பற்றி அழைத்து வருகிறார். திருமண நேரம் நெருங்குகிறது. பாதிரி கல்யாணச் சடங்கைத் தொடங்க முற்படுகிறார்.

அந்த வினாடி வரை இந்தத் திருமணத்துக்குத் தடை ஏதும் கூறாததோடு மனமுவந்து ஆதரவே அளித்து வந்த லாரன்ஸ், இப்போது அருணைப் பிடிக்க வேண்டும் என்பதற்காகவே தம் திட்டப்படி குறுக்கிட்டுப் பேசுகிறார்.)

**லாரன்ஸ்:** இந்தத் திருமணத்தை நடத்துறதிலே எனக்கொரு ஆட்சேபனை!

**மேரி:** என்னங்க?

**லாரன்ஸ்:** இந்தப் பெண் ராணி கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவள் தானா என்கிறதிலே ஒரு சின்ன சந்தேகம், அதனால் ஆட்சேபனை.

**மேரி:** இந்த நேரத்தில் தானா உங்களுக்குச் சந்தேகம்?

**லாரன்ஸ்:** இப்பத்தான் தகவல் கிடைத்தது மேரி! நீ கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவள் தான் என்கிறது தெரியும். ஆனால் இந்தப் பெண் ராணியோட ஞான ஸ்நானம் எந்தச் சர்ச்சிலே நடந்தது? 'பாப்டிஸம்' ஆச்சா? என்ன டாக்டர், நீங்கதானே கார்டியன்?

(டாக்டர் சரவணன் எழுந்து நின்று ஏதும் பேசாமல் தடுமாறுகிறார்.)

**மேரி:** இதை நீங்க முதலிலேயே தெரிஞ்சுக்கிட்டு அப்புறம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்திருக்கணும்.

**லாரன்ஸ்:** இப்போ கேட்டதாலே ஒன்னும் மோசம் போயிடலியே! அட நீ வந்து என் மகனை உங்க பையனுக்குக் கல்யாணம் செஞ்சுக்கங்கன்னு கேட்டே! நானும் சரின்னுட்டேன்! அது என் தப்பா?

**மேரி:** என்ன, நான் கேட்டேனு?

**லாரன்ஸ்:** அட, ரெண்டு பேர்லே யாரோ ஒருத்தர் கேட்டோம். இப்போ அதுவா முக்கியம்? கேட்டதுக்குப் பதில்? இவள் கிறிஸ்டியனு? கிறிஸ்டியனவே பிறந்தவளா இல்லையா?

**மேரி** (சரவணனைப் பரிதாபமாக நோக்கி) டாக்டர்?

**சரவணன்:** முருகா! ம்... இதுக்காகத்தான் மேரி, அப்பவே சொன்னேன். நீ உயிரோடே ஒரு பெண் குழந்தையோடு இருக்கிறதை உங்

## ஞான ஒளி

கே. சுந்தரம்



கப்பாவுக்குத் தெரியப்படுத்திடறேன் னுட்டு. தெரியாமலா சொன்னுங்க, பெண் புத்தி பின் புத்தின்னுட்டு! முருகா! கல்யாணம் நடக்க வேண்டிய இந்த நேரத்திலே காளிதாஸனோட சாகுந்தலத்தை நடத்தறயேப்பா!

**லாரன்ஸ்:** *மேரி...! இந்த ராணி உன் வயிற்றிலே பிறந்த மகள் என்கிற துக்கு ஏதாவது அத்தாட்சி இருக்கா?*

*சரி... உனக்கு எப்போ கல்யாண மாச்சு? கல்யாணம் ஆயிடுச்சா? எந்த சர்ச்சிலே எந்தப் பாதிரியார் உன் கல் யாணத்தை நடத்தினது? அதையாவது சொல்லு!*

**மேரி:** *நீங்களா என்னைக் கேக்கறீங்க? நீங்களா?*

**லாரன்ஸ்:** *ஆமாம்! நான் மணமக னுடைய தகப்பன்! கேட்க வேண்டியது என் கடமை!*

**மேரி:** *நீங்க கேட்கிறது கேள்வி யில்லே! கேலி!*

(முன்பு தம் கையிலிருந்து மோதிரத்தைக் கழற்றிப் பாஸ்கரனிடம் தந்து அதை மேரிக்கு அணிவிக்கச் செய்தாரே லாரன்ஸ், அதே மோதிரத்தை இப்போது லாரன் ஸிடம் கைநீட்டிக் காட்டுகிறாள் மேரி.)

**மேரி:** *இதோ, இந்த மோதிரம் யாரு துன்னு தெரியுதா?*

**லாரன்ஸ்:** உன்னேயே கொஞ்ச நாளாத்தான் எனக்குத் தெரியுங்க றேன். இந்த மோதிரத்தைப் பற்றிக் கேட்டால் எனக்கு எப்படித் தெரியும்?

**மேரி:** *பொய்... பொய்!*

**லாரன்ஸ்:** *ஆமாம். பெரிய பொய் யைச் சொல்லி மோசடி செய்து இந்தக் கல்யாணத்தை நடத்தலாம்னு பார்த்தே; முடியலே! என் டாக்டர், பதில் பேசா மல் நிக்கிறீங்க?*

**சரவணன்:** பெண்ணுக்கும் பொன் னுக்கும் எப்பவுமே சோதனை ஜாஸ்தி! ஏக பத்தினி விரதன், சிரேஷ்டமான வன்னு பேர் வாங்கின ராமச்சந்திர மூர்த்தியே சீதையைத் தீக்குளிக்க வைச்சான்னு இது ரொம்பச் சாதார ணம். நடத்துப்பா... நடத்து! எல் லாம் தெரிஞ்ச நீயே இப்படிப் பேசும் போது எல்லாத்துக்கும் மேலே ஒருத்தன் இருக்கானே...அவன்தான் உன் கேள்வி களுக்குப் பதில் சொல்லணும்! முருகா!

**லாரன்ஸ்:** நான் சொல்றேன், இந்தப் பெண் கிறிஸ்டியன் இல்லே. புனிதமான இந்தத் தேவாலயத்தில் நிற்கவே இந்த மேரிக்கு அருகதையில்லே. இவள் நடத்தை கெட்டவள். இந்தப் பெண் அவளுடைய அந்தக் களங்கத் துக்குக் கிடைத்த பரிசு.

(தான் பெற்ற மகளுக்கு ஊரறிய நடத்தைகெட்டவள் என்று பட்டம் சூட்டி லாரன்ஸ் பேசியதும் அருணுந்தம் உணர்ச்சி வசப்பட்டு அந்தோணியாகிறார். அவனுள்ளே இருக் கும் மிருக சுபாவம் சீறி எழுகிறது. லாரன்ஸின் சட்டையை இறுகப் பற்றி முறுக்கி இழுக்கிறது அந் தோணியின் இரும்புக் கரம்.)

**அருண்:** என்னடா சொன்னே?

**லாரன்ஸ்:** 'ராணி நடத்தை கெட்ட ஒருத்தி யின் மகள்' அப்படின்னு சொன்னேன்.

**அருண்:** நடத்தை கெட்டவங்கற இந்த அப வாதம் வரக் கூடாதுன்னுதானே அன்றைக்கே அவளை வெட்டப்...

(வாக்கியத்தை முடிக்காமல் வார்த்தையை அருண் முழுங்க லாரன்ஸ் அவரைச் சாமர்த்தியமாக மேலே மேலே தூண்டி விடுகிறார்.)

**லாரன்ஸ்:** யாரு வெட்டப் போனது?

**அருண்:** அவள் அப்பன்...!

**லாரன்ஸ்:** நீ யாரு? உனக்கு எப்படித் தெரியும் அந்த விவரம்?



**அருண்:** 'வெட்டிட்டா களங்கத்தை ரத்தத்திலே கழுவிட முடியுமா? அதைவிட நானே அவங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் செய்து வைச்சுடறேன்'னு சொன்னியே! 'நடக்கக் கூடாதது நடந்துட்டதாலே மேலும் நடக்கக் கூடாதது ஏதேனும் நடந்துடக் கூடாதே என்கிறதுக்காக, நான் நடத்தக்கூடாத இந்தக் கல்யாணத்தை நடத்தறேன்'னு நீ சொல்லலே? கல்யாணத்தை நீ நடத்தலே?

**லாரன்ஸ்:** இல்லே!... இல்லே! பொய்...! எனக்கு எதுவுமே தெரியாது!

**அருண்:** இவளை உனக்குத் தெரியாது?

**லாரன்ஸ்:** தெரியாது!




**அருண்:** அந்தக் கம்பவுண்டர் பால் பாஸ்கரனை உனக்குத் தெரியாது?

**லாரன்ஸ்:** தெரியாது!

**அருண்:** என்னை யாருன்னு கூட உனக்குத் தெரியாது?

**லாரன்ஸ்:** இப்பத்தான் தெரியுது, நடத்தை கெட்ட ஒருத்திக்குப் பரிஞ்சு பேசற உன் யோக்கியதை. இதுக்கு முந்தி நீ யாருன்னு எனக்குத் தெரியாது!

**அருண்:** டேய்!...

(விலங்காக மாறிய அந்தோனி உணர்ச்சி வேகத்தில் வெறி கொண்டு, தான் அருண் என்பதை மறந்து, இடது கரத்தால் மெழுகுவர்த்தி பொருத்தப்பட்ட 'ஸ்டாண்ட்'டை ஓங்குகிறான், லாரன்ஸை அடிக்க. அமைதியாகச் சிரிக்கிறார் லாரன்ஸ்.)

**லாரன்ஸ்:** புனிதமான இந்த மாதா கோயிலிலே கடமைக்காக இரண்டாவது தடவையும் நான் ரத்தம் சிந்தணும் என்கிறது இந்த அமலோற்பவ மேரி மாதா விருப்பம்னு அப்படியே நடக்கட்டும்! எனக்கு அது பெரிய பாக்கியம்! ஏன்டா நிறுத்திட்டே? ம்... அடிடா! ஓங்கினது உன் இடது கை! மிருக வெறியிலே உன்னையே மறந்துட்டே! நீ யாருன்னு எனக்கு மட்டும் தெரிஞ்சாப் போதாதே! எல்லாருக்கும் புரியணுமே... அடிடா... அடி!

**அருண்:** உன்னை நான் அடிக்க மாட்டேன்டா. அடிக்கக் கூடாது. நான் மனுசனாயிட்டேன்டா! உன்னை அடிச்சா திரும்ப மிருகமாயிடுவேன்! (தன் கையிலுள்ள மெழுகுவர்த்தியை நோக்கி) ஃபாதர்! நான் உங்களுக்குக் கொடுத்த வாக்கை மீற மாட்டேன், ஃபாதர்!

டேய் லாரன்ஸ்! என்னை நீ பிடிக்கலே! ஜெயிச்சுட்டே! 'இந்த விலங்கை உன் விலங்காலே கட்ட முடியாது'ன்னு சவால் விட்டேன். ஆனால் நீ... என்னைப் பிடிக்க விலங்குதேவையில்லே. அன்பே போதும்னு நிரூபிச்சிட்டேடா!

# புதிய மனிதன்

வண்ணச் சிறகுகள்
எண்ணற விம்மி, ஓர்

வான வெளிபறப்பேன்:—தெய்வ
மோன ஒளி நிறைப்பேன்!—அதில்,

எண்ணச் சிறைஏதும்
இல்லைஎன் றூக்கி, ஓர்

எல்லைப் புறம்சமைப்பேன்:—வான
வில்லை மறம்சமைப்பேன்!

சிந்தை புதிது:
செயலும் புதிதெனச்

சீர்வர லாறிழைப்பேன்:—பெரும்
பேர்வரு மாறுழைப்பேன்!—அதில்

புதிய யுகத்தின்
விடிகோள் மனிதனைப்

போற்றி வரவிசைப்பேன்;—பண்பை
ஏற்றி உறவிசைப்பேன்!—அச்சம்

நிதியில் உலகே
நிமிர்ந்தெழக் காணவும்

நேர்மை முழா அடிப்பேன்:—அன்புக்
கோர் மெய்விழா எடுப்பேன்!



தமிழழகன்

நான் என் மகன் மேலே வைச்சிருக்கிற பாசத்தையே விலங்காப் பயன்படுத்திட்டே! என்னை மடக்கிட்டே! ஆனால் எனக்குக் கவலை இல்லை!

எல்லாரும் கேளுங்க: நான்தான் அந்தோணி! மாஜி கொலைகாரன்!... மாதா கோயில் மணி அடிக்கிற அந்தோணி நான்தான்! இந்த மேரியோட தகப்பன்... மிருக வெறியிலே ஒரு கொலையைச் செஞ்சுட்டு இந்த இன்ஸ்பெக்டர்கிட்டே இருந்து தப்பின ஆயுள் கைதி நெம்பர் நூற்றித் தொண்ணூற்றி ஒன்பது நான்தான்! ஏன் தப்பி ஓடினேன் தெரியுமா? 'மனுஷனா வாழ்வியா'ன்னு கேட்டார் என் சாமி — ஃபாதர் அடைக்கலம். என்னாலேயும் அப்படி வாழ முடியும்னு நிரூபிச்சுக் காட்டத்தான் ஓடினேன். இப்போ எல்லாருக்கும் நான் யாருன்னு புரிஞ்சுடுச்சா? ஐயா... என் மக வாழணும். ஐயா! என் பேத்தி வாழணும் ஐயா! லாரன்ஸ்! சரிதானா?... இப்பவாவது சொல்லு. 'உன் மகள் நடத்தை கெட்டவள் இல்லே.. ஏமாந்துட்டாள், அவ்வளவுதா'ன்னு சொல்லு... அவள் தூய்மையானவள்னு சொல்லுடா... சொல்லு! சொல்லு!

(லாரன்ஸின் கால்களைக் கட்டிக் கொண்டு கதறுகிறார் அருண்)

**லாரன்ஸ்:** தாங்க்யூ அந்தோணி! நீ அந்தோணிதான்னு ஒப்புக் கொண்டால் மேரியைப் பற்றி நீ சொன்னதெல்லாம் உண்மைன்னு நானும் ஒப்புக் கொள்கிறேன்.

உன்னைத் திரும்பவும் பிடிக்கணும் என்கிற வெறி மட்டுமில்லே. திரும்ப உன்னை மனுஷனா மாத்தறேன்னு நான் ஃபாதர் அடைக்கலத்துக்கு வாக்குக் கொடுத்தேனே, அதை நிறைவேற்றவும்தான் இந்தப் புனிதமான தேவாலயத்திலே இப்படி ஒரு நாடகத்தை நான் ஆட வேண்டியதாச்சு. ஓங்கின கையை அடிக்க மனமில்லாமல் இறக்கினே பாரு! அது மட்டுமா? 'நான்தான் அந்தக் குற்றவாளி' அப்படின்னு உண்மையை எல்லார் மத்தியிலும் தைரியமா ஒத்துக் கொண்டாயே அப்போ, அந்த வினாடியிலே நீ மனுஷனாயிட்டேடா! (அருண் கரத்தில் உள்ள












அவர் முகத்தில் மலரும் மனநிறைவைப் பாருங்கள், க்ரூகோவும், மொனேகோவும் இந்தியாவிலேயே உச்ச விற்பனை யாவதற்குக் காரணமான இலட்சக்கணக்கான பேர்களில் இவர் ஒருவர்.

# பார்லே
# பிஸ்கெட்

வாங்குக இன்றே. பார்லே நன்றே!



நம்மெல்லோருக்கும் பிடித்தமான ஒரு குண விசேஷத்தைப் பெற்றவை **க்ரூகோவும், மொனேகோவும்.** ...சுவை, மணம், சுரசுரப்பு, சிக்கனம் —யாவுமே இயற்றுள் அடக்கம்; எனவேதான் இந்த பிஸ்கெட்கள் தம் வகைகளுள் உச்ச விற்பனையைப் பெற்றுள்ளன. இவற்றைத்தொடர்ந்து முன்னேறுபவை: **ஜெ:.ப்ஸ, ஓர்லே, ஸ்பின்–ஹைச் சீஸலிங்ஸ** —இந்தியாவின் முதன்மையான உப்பு பிஸ்கெட்டுகள். 30—ஆண்டு நிபுணத்துவத்தைப் பின்பலமாகக் கொண்ட, பாரதத்தின் மிக நவீனமான தொழிற்கூடத்தில் உருவாகின்றன இவை யாவும். சுவைத்து சுகம் பெற ஒன்றல்ல...பல உண்டு!

everest/567a/PPtm

மெழுகுவர்த்தியை நோக்கியவாறு) ஃபாதர்! உங்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டேன் ஃபாதர்!

**மேரி** *(தன் தந்தையின் காலில் விழுந்து):* இப்பவாவது என்னை மன்னிச்சுட்டேன்னு ஒரு வார்த்தை சொல்லுங்க அப்பா!

**அருண்:** நோ, நோ! நான் உன்னை மன்னிக்கவே மாட்டேன்! நீ அந்தத் தவற்றைச் செய்யாமலிருந்தால் நான் மனுஷனா மாறியிருக்கவே முடியாதே! ஆண்டவன் விநோதமான வழிகளைக் கையாள்கிறவன், அம்மா! **The methods of God are always strange!**

இந்தாம்மா! என் பேத்தியோட கல்யாணப் பரிசா தர நினைச்சு இதை எடுத்து வந்தேன். இப்போ உனக்குத் தரேன் இதை. இது சாதாரண மெழுகுவர்த்தி இல்லே. சஞ்சலப்படற மனசுக்குச் சாந்தி தரக்கூடிய ஞான ஒளி! நீ வைச்சுக்க. ஏன்னு எனக்கு இனிமே சஞ்சலமே கிடையாதே! (ராணியை நோக்கி) ராணி! என்னடா தாத்தா கிடைச்சும் பணக்காரனு இருந்தும் குற்றவாளியா இருக்கானேன்னு பார்க்கிறியா? உனக்குத் தான் போலீஸ்காரங்க சம்பந்தம் கிடைச்சுதே. ஏன் கவலைப்படறே? (கண்ணீர் விடும் ராணியை ஜார்ஜிடம் ஒப்படைத்தபடி) ஜார்ஜ்! என் பேத்தியை நல்லா கவனிச்சுக்குவாயா? ராணி... நானே உனக்கு 'வெட்டிங் பெல்' **(wedding bell)** அடிக்கப் போறேன். லாரன்ஸ்! அதற்கு எனக்கு அனுமதி கொடுப்பாயா?

**லாரன்ஸ்:** கண்டிப்பா நீ மணி அடிச்சுத் தான் ஆகணுமா? நீ இப்போ 199 என்கிறதை மறந்துடாதே!

**அருண்:** மணியடிச்சுட்டு ஓடிவிட மாட்டேன் இன்ஸ்பெக்டர்! திரும்பி வந்துடறேன் சார்! நான்தான் மனுஷனாயிட்டேனே! திருந்திட்டேனே!

**லாரன்ஸ்** *(தட்டிக் கொடுத்து):* ஆல்ரைட்!

**(மணி அடிக்கப் பழைய அந்தோனியாக, ஆனந்தமாகப் போகிறார் அருண். மாதாவின் சந்நிதியில் ராணிக்கும் ஜார்ஜுக்கும் திருமணம் நடக்கிறது. மணி ஓசை கேட்கிறது.)**

(முற்றும்)



# சந்திரனைச் சந்திப்போம்





ஒரு வயதாகு முன்பே குழந்தைக்கு அம்புலி அறிமுகமாகி விடுகிறான். பிறகு அவனது விளையாட்டுத் தோழனாக விளங்குகிறான். அழுகிற குழந்தைக்கு அம்புலியைக் காட்டி உணவை ஊட்டும் தாய்மார்கள் அநேகம். குழந்தை வளர்ந்து பெரியவனான பின்போ சந்திரன் அவனது உற்ற நண்பனாகிறான். இன்ப நிலவை விரும்பாத இளம் காதலர்கள் இல்லை எனலாம். அவர்களின் ரகசியங்களைப் பகிர்ந்துகொள்ளும் நண்பன் சந்திரனே அல்லவா? சந்திர வதனம், தண்மதி என்று வர்ணனை செய்யாத கவிஞர்கள் அபூர்வம்.

எல்லையில்லாததோர் வானக்கடலிடை
வெண்ணிலாவே - விழிக்
கின்பமளிப்பதோர் தீவென்றிலகுவை
வெண்ணிலாவே!......
காதலொருத்தியிளைய பிராயத்தள்
வெண்ணிலாவே - அந்தக்
காமன்றன்வில்லை பிணைத்தபுருவத்தள்
வெண்ணிலாவே!

என்று பாடினார் பாரதியார்.

இப்படி அனைவரையும் வசீகரிக்கும் சந்திரனில் என்னதான் இருக்கிறது? சந்திரனைச் சந்திப்போம்.



இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சந்திரனை ஒரு சக்தி வாய்ந்த கடவுளாகக் கருதி வந்தனர். தம்மை எதிர்க்க வரும் விரோதிகளும் கொடிய மிருகங்களும் இருட்டான நேரத்தில் பதுங்கியுள்ள இடங்களை நிலவொளியில் நன்றாகக் கண்காணிக்க முடிந்ததன் காரணமாகப் புராதன மக்கள் சந்திரனை ஒரு வரப்பிரசாதமாகக் கருதி வந்தனர்.

சந்திரன் எங்கிருந்து வந்தது, எப்படிப்பட்டது என்ற பல விவரங்களை அறிய வான சாஸ்திரிகள் பல நூற்றாண்டுகளாக முயன்று வந்திருக்கின்றனர். 1609ம் ஆண்டு கலிலியோ கலிலியை என்ற இத்தாலிய வான

சாஸ்திர நிபுணர், தாம் உருவாக்கிய தூர தரிசினியின் மூலம் சந்திரனது நிலப் பரப்பை, முதலாவதாக அதுவரை எவரும் கண்டிராத குறைந்த தூரத்தில் கண்டு ஆராய்ந்தார். அது நடந்து இன்றைக்கு 360 ஆண்டுகளே ஆகின்றன. இம் மாதம் 21ம் தேதி அமெரிக்காவின் விண்வெளி வீரர்கள் நீல்ஆர்ம்ஸ்ட்ராங், எட்வின் ஆல்ட்ரின் என்ற இருவர் சந்திரனது நிலப்பரப்பில் அடியெடுத்து வைத்து உலக சரித்திரத்தில் ஒரு சாதனையை நிகழ்த்த விருக்கின்றனர்.

சந்திரன் தோன்றியதை விளக்கப் பல சித்தாந்தங்கள் இருக்கின்றன. அவற்றில் மூன்று முக்கியமானவை. அவை (1) ஒரு காலத்தில் பூமியின் பகுதியாக இருந்து வந்த சந்திரன் பூமியிலின்றும் சிதறிஎழுந்து தனக்கே உரியதான விண்வெளி வட்டப் பாதையை (Orbit) ஏற்படுத்திக் கொண்டது. இதன் காரணமாகப் பூமியில் ஏற்பட்ட வெற்றிடம் பசிபிக் மகாசமுத்திரமாக இன்று விளங்குகிறது. (2) பூமி தோன்றிய அதே சமயத்தில் தான் சந்திரனும் தனிப்பட்ட ஒரு கோளமாகத் தோன்றியிருக்க வேண்டும். (3) விண்வெளியில் தோன்றிச் சஞ்சரித்துக் கொண்டிருந்த சந்திரன் பூமியின் ஆகர்ஷண சக்தியால் இழுக்கப்பட்டு வந்து ஒரு வட்டத்தில் நிலையாகப் பூமியைச் சுற்றி வருகிறது.

பூமியிலிருந்து சுமார் 2,38,857 மைல்களுக்கப்பாலுள்ள சந்திரனின் விட்டம் 2160 மைல்கள். இது பூமியின் விட்டத்தில் நான்கில் ஒரு பங்காகும். அங்கு காற்றோ, ஈரமோ, வாயுவோ இல்லை. ஆகவேதான், சந்திரனின் வெப்ப நிலை சூரிய ஒளி படும் இடங்களில் நீரின் கொதி நிலைக்கும் அதிகம். நிழல் படிந்த பகுதிகளில் சைபருக்கும் கீழே 250 டிகிரி பாரன்ஹீட் ஆகும். வாயு மண்டலம் இல்லாத காரணத்தால் சந்திரனின் வெய்யிலான பகுதி தீவிர உஷ்ணமாகவும் நிழலான பகுதி தீவிர குளிராகவும் இருக்கும். வாயு மண்டலம் இல்லாத அதே காரணத்தால் அங்கு ஒருவர் பேசுவது அருகிலுள்ளவர்களுக்குக் கேட்காது. சந்திரனின் ஆகர்ஷண சக்தி பூமியின் ஆகர்ஷண சக்தியில் ஆறில் ஒரு பங்கு ஆகும். அதாவது ஒரு வஸ்துவின் எடை பூமியில் 6 பவுண்டாக இருந்தால் சந்திரனில் அது ஒரு பவுண்டு எடை இருப்பதுபோல் இலேசாக இருக்கும்.

சந்திரன் தன்னைத் தானே சுற்றிக் கொண்டு பூமியையும் சுற்றி வருகிறது.

---

1. சந்திரோதயம் அல்ல; பூமி உதயமாகிறது! சந்திர நிலப்பரப்பின் உயரேயிருந்து பூமியின் தோற்றம். படம்: அப்பாலோ - 10 பயணிகள்.
2. சந்திரன்-பூமியிலிருந்து எடுத்த படம்.
3. கலிலியோ கலிலியை.

---



அது ஒரு முறை பூமியைச் சுற்றி வர 27 நாள் 7மணி 43நிமிடம் (சுமார் ஒரு மாத காலம்) பிடிக்கின்றது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. சந்திரன் தன்னைத் தானே ஒரு முறை சுற்றி வரவும் சரியாக இதே நேரம் தான் ஆகிறது. இரண்டும் ஒரே திசையில் நடக்கிறது. இதன் காரணமாகச் சந்திரனின் ஒரு பகுதி மட்டுமே பூமியிலுள்ளவர்களுக்கு எப்பொழுதும் தெரிகிறது. சூரிய வெளிச்சத்தைச் சந்திரன் பிரதிபலிப்பதன் காரணமாகச் சந்திரன் ஒளியுடன் பிரகாசிப்பதை நாம் இரவில் காண்கிறோம். சந்திர நிலப் பரப்பில் மலைகளும் குழிகளும் நிறைந்திருக்கின்றன. மலைச் சிகரங்கள் சில சுமார் இருபத்தொன்பதாயிரம் அடி வரை உயர்ந்தும் குழிகள் சில நூற்றி ஐம்பது மைல்கள் வரை விட்ட அளவு உள்ளவையாகவும் இருக்கின்றன.

சந்திர நிலப்பரப்பை அடிக்கடி நுண்ணிய எரிநட்சத்திரக் கற்கள் தாக்கிய வண்ணம் இருக்கின்றன. அங்கு வாயு மண்டலம் இல்லாத காரணத்தால் அவை எரிந்து போகாமல் இருந்து குன்றுகளாக மாறிவிடுகின்றன என்று கூறப்படுகிறது. சந்திரனின் சமதளமான நிலப்பரப்பு சன்னமான மணலும், சிறிய கற்களும் நிறைந்திருப்பதாகக் கூறப்படுகிறது. —லலிதா



# தீராத விளையாட்டு

கு. அழகிரிசாமி

"பாலுவுக்கு இப்போ உதவி செய்யறதெல்லாம் சமுத்திரத்திலே பெருங்காயம் கரைக்கிறமாதிரிதான்..." என்றான் முத்துக்குமார்.

"அப்படிச் சொல்லாதீங்க..." என்றான் ரங்கராஜன்.

"மிஸ்டர் ரங்கராஜன்! நான் சுருக்கமாச் சொல்லிப்பிடறேன். பாலுவோட தகப்பன் ஊரெல்லாம் கடனே வாங்கி இவன் தலையிலே கட்டிப்பிட்டு யார் கிட்டேயும் சொல்லிக்காமே எங்கேயோ ஓடிப்போயிட்டான். இப்போ இருக்கிறானு செத்தானு என்கிறதுகூடத் தெரியாது. அவன் போயும் இரண்டு வருஷங்களுக்கு மேலே ஆயிட்டதாம். இது ஒண்ணு ஆச்சா..."

"ஓடிப் போயிட்டாரா?"

"ஓடாமல் என்ன செய்வான்? கடன் தொல்லே. பெண்டாட்டி இம்சை. இவனோட தாயார்தான். சதா பிச்சுப் பிடுங்கிக்கிட்டே இருப்பாள். அவளோட ஒரு நாள் காலம் தள்ள முடியாது. அவள் புருஷனே விரட்டினது பத்தாதுன்னு மருமகளேயும் விரட்டிப்பிடறதுக்குப் பார்க்கிறள். அவதான் ஓட மாட்டேங்கிறள். இதனலே வீட்டிலே தினம் தவறினலும் சண்டை தவறுகிறதில்லே. ரணகளம்தான். 'ஊராலுக்கு ஒருபுறம் இடி; மத்தளத்துக்கு இருபுறமும் இடி'ன்னு சொல்வாங்க. நம்ப பாலுவுக்குத் திரும்பின பக்கமெல்லாம் இடிதான். அப்பன் வாங்கின கடனேட இவனும் தன் பங்குக்கு வேறே கடன் வாங்கியிருக்கிறன். பத்தாத சம்பளம். என்ன செய்வான்? எல்லாத்துக்கும் மேலே, அஞ்சாறு மாசத்துக்கு முன்னலே இவனேட தங்கை மேலே ஒரு கார் மோதிக் காலிலே பலமான அடிபட்டு இங்கே மதுரையிலேதான் ஆஸ்பத்திரியிலே கொண்டு வந்து ரெண்டு மாசம் போட்டிருந்தான். என்ன செலவு! கடைசியிலே அவளுக்கு வலது கால் சரியாகவே இல்லே. எப்படியோ இழுத்துக் கட்டிக் குணப்படுத்திட்டாங்க. ஆன பாதமும் காலும் கோணியே போச்சு. இருபது இருபத்தஞ்சு வயசிலே இந்த ஊனம்! அதுவும் ஒரு பெண்ணுக்கு! எப்படி இருக்கும்?... ரங்கராஜன், இந்தக் கதை போதும்! விடிஞ்சதும் இதைப் பத்திப் பேசி உங்களேக் கஷ்டப்படுத்த எனக்கு இஷ்டமில்லே. விடுங்க! ஒவ்வொருத்தன் தலையெழுத்து எப்படி இருக்குமோ, அப்படி அப்படித்தான் வாழ்க்கை அமையும். இப்படிச் சொல்லித்தான் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ளணும்....அது இருக்கட்டும், நீங்க வந்த காரியத்தைப் பேசுவோம். காலங்கார்த்தாலே வந்திருக்கிறீங்க. காரியமில்லாமல் வரமாட்டீங்க. சொல்லுங்க."

முத்துக்குமார் சொன்ன ஒவ்வொரு செய்தியினலும் மனத்தைக் கஷ்டப்படுத்திக் கொண்ட ரங்கராஜன், ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தான்.

"முத்துக்குமார்! வருஷமெல்லாம் உழைச்சும் வருமானம் பத்தாமே இப்படிக் கஷ்டப்படறவங்க உலகத்திலே இருக்கிறப்போ என்னேப்போல உழைக்காமலே சாப்பிட்டு வாழ்க்கையைக் கழிக்கிறது எவ்வளவு பெரிய பாவம்! இல்லேயா? பாவம், இவனேட சிஸ்டர் ஆஸ்பத்திரியிலே இருக்கிறப்போ எனக்குச் சமாசாரம் தெரிஞ்சிருந்தா ஏதாவது செஞ்சிருப்பேன்..."

"அதைப் பற்றியே பேசாதீங்க. அது முடிஞ்ச கதை. அந்தச் சமயத்திலே நான் என்னலே முடிஞ்ச ஒரு சின்ன உபகாரம் பண்ணினேன். எனக்குத் தெரிஞ்ச டாக்டர் ஒருத்தர் அங்கே இருக்கிறர். அவர்கிட்டே சொல்லிக் கொஞ்சம் நல்லாக் கவனிக்க ஏற்பாடு பண்ணினேன். கொஞ்சம் பணமும் குடுத்தேன்னு வச்சுக்கோங்க... அது இருக்கட்டும், உங்க சமாசாரம் என்ன? வக்கீலாகப் போறதாச் சொன்னீங்க..."

"அதைப் பத்தித்தான் பேச வந்தேன். வக்கீல்] தொழில் பண்றதுன்னு முடிவு

பண்ணிட்டேன். சித்தப்பா நெருக்குகிறார். சன்னத் வாங்க மெட்ராஸுக்குப் புறப்பட வேண்டியதுதான். இன்னிக்கு வேணும்னாலும் போகலாம்.''

''செய்யுங்கோ. எனக்குச் சந்தோஷந்தான். படிச்சிட்டுச் சும்மா இருக்கிறதும் கஷ்டமாத்தான் இருக்கும். வேறே உத்தியோகத்துக்குப்



போனால், இன்னொருத்தனுக்கு முன்னாலே கைகட்டிக்கிட்டு நிற்கணும். இது சுதந்திரமான தொழில். இதிலே வருமானம் வந்தாலும் வராவிட்டாலும் உங்களைப் பொறுத்தவரையில் அக்கறை இல்லை!''

''கிராமத்துக்குத் திரும்பிப் போய் விவசாயம் பண்ணலாம்னு ஒரு சமயம் யோசிச்சேன். அதுக்குப் படிப்பும், ரொம்ப நாள் டவுனிலே வாழ்ந்ததும் எதுக்குமே லாயக்கில்லாமல் பண்ணிட்டது. கிராமத்துக்குப் போனால் பத்துப் பேருக்கு உபகாரமாகக் கூட வாழ முடியும்...''

''ரங்கராஜன்! வக்கீல் ஆகிறதா இருந்தால் இந்தப் பத்துப் பேருக்கு உபகாரமா வாழுற மனப்பான்மை இருக்கவே கூடாது. பாலுவோட கதையைக் கேட்டு இரக்கப்படுற மாதிரி இரக்கப்படுவதும் தப்பு. ஏழைகளிடத்திலே இருந்தும் வருமானம் வரும். வாங்கிக்கத்தான் வேணும். தெரிஞ்சதா' உபகாரியா இருந்தீங்கன்னு, தினமும் பத்துக் கட்சிக்காரனுக்குச் சாப்பாடு போட்டுக்கிட்டே இருக்க வேண்டியது தான். ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னாலே இங்கே ஒரு வக்கீல் அப்படித் தான் இருந்தாராம். நல்ல செயலான குடும்பத்திலே பிறந்தவர். நல்ல மனசு. வீட்டிலே தினமும் பத்துப் பேருக்குச் சாப்பாடு போடுவாராம். இப்படிப் பட்ட வக்கீலுக்கு எந்தக் கட்சிக்காரன் ஒழுங்காகப் பணத்தைக் குடுப்பான்? கடைசியிலே போர்டு போட்டதுதான் மிச்சம். கால் காசு சம்பாதிக்கல்லே. அன்னதானம் மும்முரமாக நடந்ததாம்! கடைசியிலே அவங்க வீட்டிலே உள்ள மத்தவங்க வந்து, வக்கீல் வேலை பார்த்தது போதும்னு அவரை ஊருக்குக் கூட்டிக்கிட்டுப் போயிட்டாங்களாம். அப்புறம் ஒரு வருஷம் சும்மா கிராமத்திலே இருந்துட்டுக் கடைசியிலே ஏதோ ஒரு கோயிலிலே எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர் உத்தியோகம் பார்க்கப் போனாராம்...''

''முத்துக்குமார்! நல்ல மனுஷனைப் பின்பற்றக் கூடாதுன்னு இப்பவே எச்சரிக்கை பண்றீங்க! அதை அப்புறம் பார்க்கலாம். நான் மெட்ராஸுக்குப் போயிட்டு வர்றேன். அதுக்குப் பிறகு நான் என்னென்ன செய்யணும் என்கிறதை நீங்கதான் எனக்குக் கத்துக் குடுக்கணும்'' என்றான் ரங்கராஜன்.

''பேஷாச் செய்யறேன். நான் எப்பவும் தயார். இந்தச் சாக்கிலேயாவது நாம்ப அடிக்கடி சந்திக்கலாமே! இப்போ மாதிரி வருஷத்துக்கு ஒரு தடவைதான் சந்திக்கிறதுன்னு இராதே!''

ரங்கராஜன் வீட்டுக்குப் புறப்படும் போது ஞாபகமாக ''மெட்ராஸுக்குப் போயிட்டு வந்து உங்களைப் பார்க்கிறேன்'' என்றான். அதே மூச்சிலேயே, ''பாலு மதுரைக்கு வந்தால் நம்ப வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வாருங்க'' என்றும் சொன்னான்.

''அதைப் பத்தி இப்பப் பேசவே பேசாதீங்க. இப்போ உங்க எதிர்காலத்தைப் பத்தி மட்டும்தான் பேசணும். தொழிலிலேயே கவனம் இருக்கணும். ஒரு சமயத்திலே அஞ்சாறு சங்கதியிலே கவனம் போகக் கூடாது'' என்று சொல்லி ரங்கராஜனை அனுப்பி வைத்தான் முத்துக்குமார்.

## அத்தியாயம் 18

அருணாசல முதலியாரின் கடிதத்துக்குப் பதில் எழுதிய ரங்கராஜன், தான் புதன்கிழமையன்று சென்னைக்குப் புறப்படுவதாகவும், வெள்ளிக்கிழமை காலையில் மதுரைக்குத் திரும்பி விடுவதாகவும் தெரிவித்திருந்தான். அவன் சென்னைக்குச் செல்லும் தேதியைக் குறிப்பிட்டு நடராஜ முதலியாரும் தம்பிக்கு ஒரு கார்டு போட்டிருந்தார். வியாழக்கிழமையன்று அவன் சென்னையில் இருப்பான், மதுரையில் இருக்க மாட்டான் என்பதைத் தெரிந்து, வேண்டுமென்றே அருணாசல முதலியார் வியாழக்கிழமைக்காகக் காத்திருந்து அன்று மத்தியானம் மதுரைக்கு வந்து சேர்ந்தார்.

அவர் வரும்போது பிற்பகல் இரண்டரை மணி. நேரே தமையன் வீட்டுக்குத்தான் வந்தார். வந்து உள்ளே எட்டிப் பார்க்கும் போது ஜானகியம்மாளும் விஜயாவும் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்தார். இவரைப் பார்த்ததும் விஜயா நமஸ்காரம் செய்தாள். ''வாருங்க'' என்றுசொன்னாள் ஜானகியம்மாள்.

வந்தவர் உட்காருவதற்கு ஒரு நாற்காலி எடுத்துப் போட வேண்டும் என்று விஜயா பரபரப்போடு சுற்றும் முற்றும் பார்த்தாள். ஆனால் அங்கே நாற்காலி எதுவும் இல்லை. எல்லாம் மாடியில் தான் கிடந்தன. அருணாசல முதலியார் எப்பொழுது வந்தாலும் நேரே மாடிக்குப் போய் விடுவாரே ஒழிய, கீழே உட்கார்ந்திருக்கும் வழக்கம் கிடையாது. இந்த விஷயம் விஜயாவுக்குத் தெரியாது. வந்தவர் உட்கார

முடியாமல் நிற்கிறாரே என்று அவள் தவித்துக் கொண்டு கையைப் பிசைந்த வாறு நின்றாள்.

அருணாசல முதலியார் மாடிக்குச் செல்வதற்காகத் திரும்பிப் போய் மாடிப் படியில் கால் வைத்தார். அப் போது ''அண்ணாச்சி வீட்டிலே இருக்கிறா ஹளா?'' என்று ஒரு கேள்வியையும் கேட்டார்.

''இருக்கிறாஹ. தூங்குறாஹ போலி ருக்கு'' என்றாள் ஜானகியம்மாள்.

''தூங்குறாஹளா? சரி. தூங்கட்டும். நான் வெளியே போயிட்டு ஒரு மணி நேரத்திலே வந்துடறேன்'' என்று சொல்லிவிட்டுப் படியில் வைத்த காலே எடுத்துத் தரையில் ஊன்றினார்.

''ராஜா திருநெல்வேலி எக்ஸ் பிரஸிலே புறப்பட்டுப் போனான் போல இருக்கு...'' என்று போகிற போக்கில் சொல்லிக் கொண்டார்.

''ஆமாம்'' என்று விஜயா சொன் னாள்.

அவர் அவள் முகத்தைத் திரும்பிப் பாராமல், ''நாளேக்கே திரும்பி வந் துடுறதா எழுதி யிருந்தான்'' என்று ஜானகி அம்மாளேப் பார்த்துச் சொன் னார். அந்த அம்மாள் உடனடியாகப் பதில் சொல்லி விடவில்லே. ஏதோ தயங்குவது போல் இருந்தது. இதைப் பார்த்த விஜயா, ''கட்டாயம் நாளேக்கு வந்துடறதாச் சொல்லிட்டுப் போயிருக் கிறார்'' என்றாள்.

அப்போது அருணு முதலியார் அவளே ஒரு தடவை திரும்பிப் பார்த்து விட்டு, ''சரி'' என்று அனுவசியமாகக் குரலே உயர்த்திச் சொல்லிக் கொண்டு வெளியே போய்விட்டார்.

கோபித்துக்கொண்டு போகிறவரைப் போல் அவர் வெளியே சென்றதைப் பார்த்த விஜயாவுக்கு என்னவோபோல் இருந்தது. திகைத்துப் போய் ஜானகி யம்மாளின் முகத்தைப் பார்த்தாள். அந்த அம்மாள் இவளுடைய திகைப் பைச் சற்றும் உணராத நிலேயில் ஒரு புன்னகையும் செய்து கொண்டு, ''நீ இருக்கப்போய்த்தான் அவர் இந்த நாலு வார்த்தையாவது என்னேடு பேசியிருக் கிறார். சாதாரணமா என்னேடே அவர் பேசுறதே கிடையாது'' என்று சொன்னாள்.

விஜயாவுக்கு அது இன்னும் அதிக மாகத் திகைப்பை உண்டுபண்ணியது. அந்த அம்மாளுக்கும் அவருக்கும் இடையே ஏதாவது மனஸ்தாபம் இருக் குமோ என்றுகூட நினேத்துவிட்டாள்.

''ஏன் உங்ககிட்டே அவர் பேசறது கிடையாது?'' என்று குழந்தையைப் போல் கேட்டாள் விஜயா.

அந்த அம்மாள் வாய் விட்டுச் சிரித் தாள்.

''ஏன் சிரிக்கிறீங்க?''

''உனக்குத் தெரியாது. நீ இந்தக் காலத்துப் பொண்ணு. படிச்சவள். நாங்க அந்தக் காலத்து ஆட்கள். அண் ணன் சம்சாரம்னு அவ்வளவு மரியாதை! எங்களுக்கும் மச்சினர்கிட்டே அதே மாதிரி மரியாதை. எதிரே நிற்கக்கூட மாட்டோம்.''

''இது அதிசயமா யிருக்கு!''

''உனக்கு அப்படித்தான் இருக்கும். நான்தான் சொன்னேனே!'' என்று அந்த அம்மாள் சொன்னபிறகுதான் அவர் கோபித்துக் கொண்டு போக வில்லே, அண்ணியின் எதிரே நிற்க முடியாமல்தான் அப்படி வேகமாக ஓடியிருக்கிறார் என்று விஜயா நினேத்துக் கொண்டாள். அவர் ''சரி'' என்று உரத்த குரலில் சொன்னது எதற்கு என்பதை ஆராய அவளுக்குத் தோன்றவில்லே.

விஜயா சிறிது நேரத்தில் தன் வீட் டுக்குப் போய்விட்டாள். ஆனல் மாலே ஐந்து மணிக்கு அருணாசல முதலியார் தம் வியாபாரக் காரியங்களே முடித்துக் கொண்டு திரும்பி வரும்போது, விஜயா ஒரு பத்து நிமிஷம் முன்னதாகவே வந்து அங்கே இருந்தாள். அவர் அவளேப் பார்த்துவிட்டே மாடிப் படி யில் ஏறிச் சென்றார்.

மேலே சகோதரர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்தபோது, கீழே ஜானகியம்மாள் விஜயாவைப் பார்த்து, ''ராஜா ஒரு நாள் ஊரில் இல்லாதது கை ஒடிஞ்ச மாதிரி இருக்கு'' என்றாள்.

''ஏனம்மா?''

''ரெண்டு பேரும் மேலே பேசிக்கிட் டிருக்கிறாஹ. காப்பி பலகாரம் சாப்பி டல்லே. ராஜா இருந்தால் ரெண்டு பேரையும் கீழே கூட்டிக்கிட்டு வரு வான்.....''

''இதிலே என்ன கஷ்டம்? நீங்களே கூப்பிடலாமே?''

''விஜயா! அதிலே தப்பு ஒண்ணு மில்லே. ஆனல் அப்படிக் கூப்பிட்டுப் பழக்கம் இல்லே!''

''அம்மா! நீங்க சொல்றது ஒவ் வொண்ணும் எனக்கு ஆச்சரியத்துக்கு மேலே ஆச்சரியமா யிருக்கு. நானே கூப்பிட்டுடுவேன். ஆன உங்க வீட்டுப் பழக்கங்களேப் பார்க்கிறப்போ, அப் படிக் கூப்பிடலாமோ கூடாதோன்னு எனக்கும் இப்போ பயமா யிருக்கு... ஒண்ணு செய்யலாமே! நாம்பளே மேலே கொண்டுபோய் வைச்சிடலாமே. அப்படிச் செய்யலாம் இல்லேயோ?''


Nirlon

# ஃபாஸ்ஃபோமின்



## சக்தியை அதிகரிக்கிறது.



## பசியைத் தூண்டுகிறது.

## வலிவைப் பெருக்குகிறது.



## நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்

ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய,
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.




SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும். கரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS — Shilpi SC 50 A /67 Tam

''எதுவும் செய்யலாம்; கூப்பிடவும் கூப்பிடலாம்; நாம்பளும் கொண்டு போய் வைக்கலாம்...'' என்று சொல்லி விட்டுத் தட்டுக்களை எடுத்து அவற்றில் இலைத் துண்டுகளைக் கிழித்துப் போட்டாள் ஜானகி அம்மாள். பக்ஷணங்களையும் எடுத்து வைத்தாள்.

''அம்மா! இதை நானே கொண்டு போய் வைக்கிறேன். நீங்க வேணுமானு காப்பியை மட்டும் எடுத்துக்கிட்டு வாருங்க'' என்று விஜயா முன்வந்தாள்.

ஜானகியம்மாளுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. படித்த பெண்; பணக்கார வீட்டுப் பெண், இப்படியெல்லாம் சேவை செய்ய வருவதைப் பார்த்து, ''விஜயா! சும்மா இரும்மா. இந்த வேலையெல்லாமா நீ செய்யறது? அதுவும் எங்களுக்கு? வேண்டாம்.. நானே போகிறேன்'' என்று சொல்லித் தடுத்தாள்.

அவள் தடுத்தது விஜயாவுக்கு அதிகத் துணிவையே கொடுத்தது.

''இப்படி நீங்க சொன்னுல் தட்டுகளை உங்க கையிலிருந்து பிடுங்கிக்கொண்டே போயிடுவேன். இப்படிச் சொல்றதுக்காக நீங்க என்னை ஒரு அடி வேணும்னுலும் அடிச்சுடுங்கோ!'' என்று சொல்லிக் கட்டாயப்படுத்தித் தட்டுக்களை வாங்கிக் கொண்டு விட்டாள். அந்த அம்மாள் அப்புறமும் ஏதாவது தடுத்துச் சொல்லக்கூடும் என்று வேகமாக மாடிக்குத் தட்டுக்களை எடுத்துச் சென்ருள்.

விஜயா வருவதைச் சற்றும் எதிர்பார்த்திராத நடராஜ முதலியாரும், அருணுசல முதலியாரும் ஒன்றும் புரியாமல் அவளை ஏற இறங்கப் பார்த்தார்கள். அருணுசல முதலியாரின் முகம் 'கடுகடு'என்று மாறிவிட்டது.

விஜயா அவர்களைப் பார்த்து மன்னிப்புக் கோருவதுபோல் நைச்சிகமாகச் சிரித்துவிட்டு, ஜானகியம்மாளை எதிர்பார்த்துக் கொண்டு நின்ருள். அந்த அம்மாள் வந்து காப்பியையும், தண்ணீர்ச் செம்பையும் வைத்தாள்.

''நாங்களே கீழே வந்திருப்போமே. படியேறி வந்து சிரமப்படுவானேன்?'' என்று தலைகுனிந்துகொண்டே சொன்னுர் அருணுசல முதலியார்.

ஜானகி அம்மாள் அதற்கு ஒன்றும் சொல்லவில்லை.

விஜயாதான், ''காப்பியைக் கூட நானே எடுத்து வந்திருப்பேன் ....'' என்ருள்.

அப்போது அருணுசல முதலியார் அவளைச் சினந்த பார்வையோடு பார்த்தார்.

விஜயா பயந்து விட்டாள். ஜானகியம்மாளை முந்திக் கொண்டு தான் பேசியது தப்பான காரியமோ என்று அவளுக்குப் பயம். 'இந்த வீட்டில் ஒருத்தரோடு ஒருத்தர் நடந்துகொள்றதிலே எத்தனையோ சம்பிரதாயமிருக்கு. ஒண்ணுமே புரியல்லே' என்று சொல்லிக் கொண்டாள். ஜானகியம்மாள் கீழே இறங்கிச் செல்லும்போது பின் தொடர்ந்து போய், கீழே இறங்கிய பிறகு, ஒருதடவை விஜயா ஆசுவாசப் பெருமூச்சு விட்டுக் கொண்டாள். பிறகு அந்த அம்மாளிடம், ''நான் ஏதாவது தப்பாப் பேசிட்டேனு அம்மா? அவங்க சித்தப்பா என்னை ஒரு மாதிரி கோபமா ஏறிட்டுப் பார்த்தாரே எதுக்கு? எனக்கு என்னவோ பயமாயிருக்கு'' என்று மனசில் உள்ளதை வெளிப்படையாகச் சொல்லி விட்டாள்.

ஜானகியம்மாளுக்கு அவளுடைய பயத்தைக் கண்டு சிரிப்புத்தான் வந்தது.

''நீ அவர் மீசையைப் பார்த்துப் பயந்துட்டே போலிருக்கு! உன் மேலே அவருக்கு என்ன கோபம்? உன் குணத்துக்கு உன்மேலே கோபப்பட ஒருத்தருக்கு மனசு வருமா விஜயா! ஒரு வட்சாதிபதியோட மகள் வந்து பணிவிடை செய்யறதைப் பார்த்துட்டு, 'நம்ப பாக்கியம்'னு நினைப்பாங்களா? கோபப்படுவாங்களா? இப்போ ராஜா இங்கே இல்லேயென்னு இருக்கு. அவன் இருந்திருந்தால், விழுந்து விழுந்து சிரிச்சிருப்பான். சித்தப்பாவோட மீசையைச் சுட்டிக்காட்டி அவரைக் கேலி பண்ணி யிருப்பான். அப்புறம் அவர்தான் உன்னைப் பார்த்துப் பயந்து ஓடுருப்லே பண்ணி யிருப்பான்.''

ஜானகியம்மாளின் பேச்சை மிகவும் ரசித்தாள் விஜயா.

''ரொம்ப நல்லாப் பேசறீங்க, அம்மா!'' என்று வியந்து பாராட்டவும் செய்தாள். சிறிது நேரத்தில் தன் வீட்டுக்குப் புறப்பட்டுப் போய் விட்டாள்.

ஜானகியம்மாளும் விஜயாவும் கீழே பேசிக் கொண்டிருந்தபோது நிலவிய சூழ்நிலைக்கும் மேலே சகோதரர்கள் பேசிக் கொண்டிருந்தபோது நிலவிய சூழ்நிலைக்கும் இடையே நேர்மாருன வேறுபாடு காணப்பட்டது. அங்கேயிருந்த மனக் கஷ்டத்தோடு இருவரும் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அருணுசல முதலியார் முதலில் நிலங்களைக் கிரயம் செய்து கொடுப்பதற்கான பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்ய வேண்டும் என்றும், பிளுங்கு சுப்பையா இரண்டு தடவை சாத்தாருக்கு வந்து ஞாபகப்படுத்தி விட்டுச்

சென்றுன் என்றும்தான் பேச்சைத் தொடங்கினர். ரங்கராஜனும் பத்திரத்தில் கையெழுத்துப் போட வேண்டுமாதலால் அவன் சென்னையிலிருந்து திரும்பியதும், அவனை அழைத்துக் கொண்டு நடராஜ முதலியார் சாத்தூருக்கு வரவேண்டும் என்றும் தெரிவித்தார். அடுத்துத் தாம் சொல்ல வேண்டும் என்று நினைத்த விஷயத்தை எப்படித் தொடங்குவது என்று சங்கலத்தோடு அவர் யோசித்துக் கொண்டிருந்தபோது, நடராஜ முதலியார், ''ராஜா வக்கீல் ஆகப் போருன்!'' என்று வாயும் மனமும் கொள்ளாமல் மகிழ்ச்சிப் பெருக்கை வெளியிட்டார்.

இன்ப துன்பங்களை எந்தச் சமயத்திலும் வெளிக்காட்டிக் கொள்ளாத அவர், தமது அடக்க சுபாவத்தையும் மீறிக் கொண்டு இவ்வாறு பூரித்துப் புளகித்துப் பேசுவதைப் பார்த்த அருணசல முதலியார், தமையனின் சந்தோஷத்தை ஒரு சிறிதுகூட ஒரு சிறு வார்த்தையால் கூடத் தடங்கல் செய்ய விரும்பவில்லை என்பது மட்டுமல்ல; அந்தச் சந்தோஷத்தில் பங்குகொள்ள அவருக்கே ஆசை உண்டாயிற்று.

''இதுக்குத்தான் நானும் தவம் கிடந்தேன். கோர்ட்டிலே நம்ப ராஜா 'லா பாயிண்டு'களைச் சொல்லி இங்கிலிஷிலே பொழியறதைக் கண்ணுலே பார்க்கணும்'' என்று அசல் கிராம மனப்பான்மையுடனும் அபிலாஷையுடனும் பேசினர் அருணசல முதலியார்.

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதுதான் விஜயா மேலே வந்து இருவர் முன்னிலையிலும் பலகாரத் தட்டுக்களை வைத்தாள். அவளைப் பார்த்த மாத்திரத்தில் அருணசல முதலியாரின் சந்தோஷம் எல்லாம் பறந்து விட்டது. சாத்தூரிலிருந்து மூட்டை கட்டிக் கொண்டு வந்திருக்கும் விஷயத்தை உடனடியாகப் பேசிவிட வேண்டியது தான் என்று முடிவு செய்து விட்டார். விஜயாவும் ஜானகியம்மாளும் கீழே போனதும், ''இந்தப் பொண்ணு இப்படியெல்லாம் வந்து வீட்டோடு பழகுறதை நீங்க கவனிச்சீங்களா இல்லையா? எப்பவுமே இது நம்ப வீட்டிலே தான் இருக்கா என்ன? மத்தியானம் வந்தேன்; இங்கேதான் இருந்தாள். இப்பவும் இங்கேதான் இருக்கிருள். நான் கேட்கிற கேள்விக்கு முந்திக் கிட்டுப் பதில் வேறே சொல்ருள்!'' என்று அருணசல முதலியார் பேச நினைத்ததைப் பேசத் தொடங்கி விட்டார்.

நடராஜ முதலியார் இந்தப் பேச்சை எப்படி வரவேற்கிருர் என்பதை அறிய அவர் முகத்தைக் கூர்ந்து கவனித்தார். அவரோ முகத்தில் சலனமில்லாமல் தம்பியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

''இது கல்யாணமாகாத பொண்ணு தானே?'' என்று ஒரு கேள்வியைப் போட்டார் தம்பி.

''ஆமாம்.''

''கல்யாணமாகாத பொண் இப்படியா அடுத்த வீட்டிலே வந்து பழகுறது? இவளோட தாய் தகப்பன் எப்படி விட்டுக்கிட்டு இருக்காங்க? இங்கே ஒரு வாலிபப் பையன் இருக்கிறது அவங்களுக்குத் தெரியாமலா இருக்கும்?''

நடராஜ முதலியார் ஒன்றும் சொல்லாமல் தலையைக் குனிந்தார்.

அருணசல முதலியார் கொஞ்சம் ஆத்திரத்துடனேயே பேசத் தொடங்கினர்: ''இது கொஞ்சம் கூட நல்லா இல்லை. பெண்ணைப் பெத்தவங்கதான் சும்மா இருக்கிருங்கன்னு, நாம்பளுமா சும்மா இருக்கிறது? நாளைக்கு அவனுக்கும் ஓர் இடத்திலே கல்யாணம் நடக்கணும். இவனும் மதிப்போட வக்கீல் தொழில் செய்யணும். இந்த மாதிரி உறவாடிக்கிட்டிருந்தா, இவனை ஊரிலே எவன் மதிப்பான்? இதையெல்லாம் முளையிலேயே கிள்ளல்லேன்னு அப்புறம் பெரிய தப்புத் தண்டாவிலே வந்து சேரும்?...''

''வாஸ்தவம்'' என்று குனிந்து கொண்டே சொன்னர் முதலியார்.

''அதெல்லாம் காலா காலத்திலே கண்டிச்சு வைக்கணும். ஒத்தைப் பிள்ளை தான்; செல்லப் பிள்ளைதான். இருந்தாலும் வழியை விட்டு விலகிப்போக இடம் குடுக்கிறதா? வேறென்னனும் வேண்டாம்; நாளைக்கு இந்தப் பொண்ணோட தகப்பன் வந்து, 'உங்க பிள்ளை இப்படி நடந்துக்கிட்டான். நீங்க வளர்த்த லட்சணமா இது? என் பொண்ணு இங்கே வந்து கும்மாளம் போடுறதைப் பார்த்துக்கிட்டுத்தானே இருந்தீங்க. ஒரு வார்த்தை தடுத்துச் சொன்னீங்களா? உங்க வீட்டுப் பொண்ணு இன்னெரு வீட்டிலே போய் விளையாடினு நீங்க பார்த்துக் கிட்டு இருப்பீங்களா?'ன்னு கேட்டால் நாம்ப என்ன பதில் சொல்ல முடியும்னு கேட்கிறேன். இதையெல்லாம் யோசிக்கணும். அதோட அந்த மனுஷன் பெரிய பணக்காரன்னு வேறே சொல்றீங்க. அப்படிப்பட்டவன் பகையை நம்மாலே சமாளிக்க முடியுமா? 'பெரியவன் சிநேகம் இல்லாட்டாலும் பரவாயில்லே, பெரியவன் பகை கூடா துன்னு சொல்லுவாங்களே!'' என்ருர் அருணசல முதலியார். (தொடரும்)

# பயிர்களுக்குப் பாதுகாப்பு... உங்களுக்கு நிச்சய லாபம்

## இவை இரண்டையுமே அளிக்கிறது, எஸ்ஸோவின் புதிய பயிர் பாதுகாப்புத் திட்டம்.

இப்பொழுது ஒவ்வொரு பயிருக்கும்...தனிப்பட்ட பாதுகாப்புத் திட்டம்.

உங்கள் பயிர்களைப் பாழடிக்கும் பூச்சிகளையும் நோய்களையும் பற்றிய கவலைகளை இனி விட்டொழியுங்கள். எஸ்ஸோவின் புதிய பயிர் பாதுகாப்புத் திட்டங்களைக் கையாண்டு லாபமடையுங்கள்! எல்லா வகைப் பூச்சிகளிலிருந்து உங்கள் பயிர்களுக்கு முழுப் பாதுகாப்பும் அளிப்பதற்கென்றே இத் திட்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

உங்கள் பயிர், அதாவது நெல், பருத்தி, கரும்பு, நிலக்கடலை, புகையிலை, காய்கறிகள் ஆகிய எதுவானாலும், உங்கள் பயிருக்கு நேரும் தொல்லை எதுவானாலும், அதற்கான பரிகாரம் எஸ்ஸோவிடம் உள்ளது.

நினைவிருக்கட்டும், உங்கள் பயிர்களைப் பாதுகாக்க எஸ்ஸோ எத்தனையோ பூச்சிக்கொல்லிகளை வழங்குகிறது—மிதைதியான், லின்டேன், DDT, BHC, நுரைதியான், எண்டிரின், ஸிரம், ஸிநெப், காப்பர் ஆக்ஸிக்ளோரைடு, எஸ்ஸோ பூசணக்கொல்லி 405 (காப்டான்), கரைக்கும் கந்தகம், இன்னும் எத்தனையோ பூச்சிக்கொல்லிகள் பல்வேறு உருவங்களில், அதாவது தூவக்கூடிய பொடியாகவும், தெளிக்கக்கூடிய திரவமாகவும் கிடைக்கின்றன.

யாவும் உங்களுக்கே...மேலும் பல நலன்களையும் அளிக்கிறது எஸ்ஸோ! தனது தொழில்நுட்ப செய்திறனையும், முதிர்ந்த அனுபவத்தையும் ஒவ்வொரு கிராமத்திற்கும் கொண்டு செல்கிறது எஸ்ஸோ.

ஒவ்வொரு பயிர் பாதுகாப்புத் திட்டம் பற்றிய விவரங்களையும் உங்கள் எஸ்ஸோ பூச்சிக்கொல்லி வியாபாரியைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள், இன்றே!

அல்லது, எங்களுக்கு எழுதி, இலவசப் பிரசுரங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்: எழுத வேண்டிய முகவரி

**எஸ்ஸோ ஸ்டாண்டர்டு ஈஸ்டர்ன் இன்க்.**

தபால் பெட்டி 355, பம்பாய் 1. அல்லது தபால் பெட்டி 146, கல்கத்தா 1. அல்லது தபால் பெட்டி 115, சென்னை 1 அல்லது தபால் பெட்டி 255, புது டெல்லி 1.

PESTICIDES

**எஸ்ஸோ ஸ்டாண்டர்டு ஈஸ்டர்ன், இன்க்.**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடைமையுடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது.)
பம்பாய் . கல்கத்தா . சென்னை . புது டெல்லி

CME-30.TAM

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






# காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6.D TAM.



வானவீதியில் ஒரு வானரம்!
எல்லா சௌகர்யங்களும் கொடுத்திருக்கா... ஆனால் அரிச்சா சொரிஞ்சுக்க முடியவில்லை. பூமியிலே என் இனத்தாரெல்லாம் ஆனந்தமா சொரிஞ்சிண்டிருப்பா!
என்னதான் வாயிலே வந்து ஆகாரம் விழுந்தாலும் பூமியிலே விழுந்த ஒரு பட்டாணிக் கடலையைப் பொறுக்கிப் போட்டுக்கற சுகம் வருமா!
குரங்கு கையிலே பூமாலை மாட்டிண்டாப் போலேன்னு மனுஷன் சொல்லுவான். மனுஷன் கையிலே குரங்கு மாட்டிக்கிறதை விட இது ஒன்றும் பெரிசில்லை!
சாமா




என் பெயர் என்ன தெரியுமா? 'ஆஸ்ட்ரோ மாங்க்' காம்!




மனுஷா ராக்கெட்டில் போனால் மனைவியுடன் தொடர்பு வச்சுக்கறா. என் கணவருக்கு அந்த ஏற்பாடு கிடையாதா?... இல்லை அவர் வேறு யாரோடேயும் தொடர்பு வச்சிண்டு இருக்கிறாரா?

# ஓடும் மனிதர்கள் ஓடட்டும்...



ராஜேந்திரகுமார்

நூற்றுக் கணக்கான மைல்களைச் சில மணி நேரத்துக்குள் கடந்தாக வேண்டிய பொறுப்புணர்ச்சி. 'விரைவு வண்டி' யொன்று விரைந்து போகிறது.

ஓயாத குழலொலியுடன் அதை முந்திக் கொள்ள முயன்று தோற்றுக் கொண்டிருக்கிறது ஒரு லாரி. பாவம். குறைந்த நேரத்தில் நிறைந்த நேரம் போக வேண்டிய பொறுப்பு அதற்கும் உண்டு. ஆனால் 'விரைவு வண்டி'க்கு இல்லாத 'செக் போஸ்ட்' தொல்லைகள் இதற்கு உண்டல்லவா? அதனால் தான் முந்திக்கொள்ளப் பார்க்கிறது. ஓடுகிறது. ஓடட்டுமே. நான் தடுக்க மாட்டேன்.

வந்து வந்து போகும் கார்களின் நடமாட்டம். அதை மிஞ்ச முயலும் ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள்களின் இடைவிடாத போட்டி. கும்பல் கும்பலாக நெரிசலில் நுழைந்து புகுந்து ஓடும் சைக்கிள்களின் கிண் கிணி ஓசைகள். நகரும் மனிதர்கள்...ஓடும் மனிதர்கள்... பதற்றம்... ஒரே பரபரப்பு....

ஓடுபவர்களில் முக்கால்வாசிப் பேருக்கு 'ஆபீஸில் மானேஜர் கத்துவாரோ?' என்ற பயம். சிலருக்கு ஆபீஸில் முன் நாள் முடிக்காமல் விட்ட வேலை தெறட்டினார்க்கின் கண்ணில் பட்டுவிடுமோ என்ற பீதி.

தோளிலே தொங்கும் பிளாஸ்க், கையிலே ஏந்திய ஒரு பை, ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டிய அம்மாமி ஒருத்தி, பஸ்ஸுக்குக் காத்திருக்கும் பொறுமை இல்லாமல், டாக்ஸியில் முணுமுணுப்புடன் ஏறி மறைகிறாள். பாவம், யாருக்கு என்ன உடம்போ! போகட்டும்.

நான் தடுக்க மாட்டேன். ஏன் தடுக்க வேண்டும்?

''ஹலோ!'' எனக்குப் பின்னாலிருந்து குரல் கேட்கிறது. யாரென்று எனக்குப் புரிகிறது. சத்யம். மோட்டார் சைக்கிளில் ஸ்டைலாக அமர்ந்திருக்கும் அவனிடம் பேச எனக்குப் பிடிக்கவில்லை. உண்மைதான். ஆனாலும் பேசுகிறேன். ''என்னடா சத்யா?''

நான் 'டா' போட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை என்பது அவன் முகம் போகும் போக்கிலேயே தெரிகிறது. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. பிறரை மட்டமாகவும், தன்னை உயர்வாகவும் பேசுவது என்றால் அவனுக்கு அல்வா சாப்பிட்ட மாதிரி. அதனால்தான் நானே முந்திக் கொள்கிறேன்.

காரணம் என்னிடம் நிறையத் தன்னம்பிக்கை இருக்கிறது.

''கேள்விப்பட்டேம்பா. ரொம்பவும் வருத்தமாப் போச்சு.'' அவன் முகத்தில் வருத்தமில்லை. திமிர்தான் தெரிகிறது. ''உனக்கு என்றிருந்த ஒரே துணை உன் தாத்தா. அவரும் போய் விட்டாராமே?''

'அநாதையாகி விட்டாய்' என்கிறான் மறைமுகமாக. எனக்கா தெரியாது? ''ச்சொ! என்ன பண்ணலாம்? நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்'' என்கிறேன் அலட்சியமாக.

''அது சரி'' — அவன் கண்ணில் குறும்பு தெரிகிறது. ''ஸ்கூட்டர் ஒன்று குறைந்த விலைக்கு வருகிறது. முந்திக் கேட்டாயே, இப்ப வேணுமா?''

தொட்டிலை ஆட்டுவதுபோல் இந்தக் குழந்தையைக் கிள்ளுகிறான்.



''பண வசதி சரியில்லே'' என் முகத்தில் அவன் எதிர்பார்த்த வேதனையில்லே. சிரிப்புடன் பேசி அவன் ஆத்திரத்தைக் கிளப்புகிறேன். ''எதிர்பார்க்கிற பணம் வரட்டும். உன்னேயே கேட்கிறேன். நீயே வாங்கித் தரலாம். நானும் உன்னேப் போலவே நடுத்தெருவில் 'போஸ்' கொடுக்கிறேன்.''

''ராஸ்கல்''. காரணமில்லாமல் கோபம் வருகிறது அவனுக்கு. ''உன்னேப்போல் இமிர் பிடித்தவனே நான் பார்த்ததேயில்லே. ஏண்டா இன்னும் உயிரோட இருக்கே? உன் நிலேயிலே நான் இருந்தால் இந் நேரம் தற்கொலே பண்ணிக்கிட்டிருப்பேன்.''

எனக்குத் திமிராம்! இவன் சொல்கிருன்! நான் சிரித்துக் கொண்டே போகிறேன். சும்மா சொல்லக் கூடாது. எனக்கு அசாத்திய நம்பிக்கை உண்டு. ஆனல் அதைச் சொல்லிக் கொள்ள மாட்டேன். காரணம் எனக்குத் தற்பெருமை பிடிக்காது.

''யாரை நம்பி நான் பொறந்தேன் போங்கடா போங்க.''

ஓடும் மனிதன் ஒருவனின் டிரான்ஸிஸ்டர் ஏதோ சினிமாப் பாட்டைப் பாடுகிறது. அர்த்தத்துடன் அவனேத் திரும்பிப் பார்த்துச் சிரிக்கிறேன். அவன் வேண்டுமென்றே பல்லேக் கடித்துக் கொண்டு, வலது காலால் ஓங்கி ஓங்கி உதைத்து வண்டியைக் கிளப்புகிருன். நான் பார்க்க வேண்டுமாம். கிளம்பிய மோட்டாரை நிறுத்தி மீண்டும் வலது

காலால் உதைத்து உதைத்து.... நான் சிரிப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. போய் விட்டான். ஓடும் மனிதர்களோடு சேர்ந்து அவனும் ஓடுகிறான். ஆனால் நான்...

தனியாக நடக்கிறேன். டக் டக்கென்று ராஜ நடை நடக்கிறேன். நிமிர்ந்த நெஞ்சும் விறைத்த உடலுமாக நடக்கிறேன். எங்கே போகிறேன்?

பட்டினத்தின் கலகலப்புக்கும் எனக்கும் ஒத்து வராது. ஏதாவது நல்ல கிராமமாகப் பார்த்துக் குடியேறப் போகிறேன். வீட்டை விற்றது, ஆபீஸில் தந்தது என்று ரூபாய் முப்பதாயிரம் வரை இருக்கிறது. ஏதாவது நிலம் நீச்சு வாங்கி, உழுது பயிர் செய்து வாழப் போகிறேன்.

அப்போது இந்த ஓடும் மனிதர்கள் என் பின்னால் கை கட்டி வருவார்கள். நான் ஒன்றும் தற்பெருமையடித்துக் கொள்ளவில்லை. வள்ளுவரே சொல்லியிருக்கிறாராக்கும்.

என்ன இது சத்தம்?

மெதுவாகத் திரும்பிப் பார்க்கிறேன். மயிரிழையில் என்பார்களே அது போல் அருகிலே ஒரு லாரி நிற்கிறது. ஏதோ யோசனையில் ரோட்டைக் கடந்து விட்டேன் போலிருக்கிறது. வேறு யாராவதாக இருந்தால் துள்ளி, பதறிப் போயிருப்பார்கள். நான் ஓட மாட்டேனே!

போன யுத்தத்தில் பாகிஸ்தான் டாங்கியொன்றைப் பார்த்து வீரத்தோடு நெருங்கி ஓடினேனே, அதுதான் நான் கடைசியாக ஓடியது. அதிலிருந்து நான் ஓடுவதையே விட்டு விட்டேன். குளிர் விட்டுப் போயிற்று என்றுதான் வைத்துக் கொள்ளுங்களேன்.

சிடுசிடுப்புடன் வெளியே பார்த்த லாரி டிரைவரின் முகத்தில் அனுதாபம் நிறைகிறது. ''போங்க ஸார்!'' என்று அனுமதிக்கிறான்.

ஆனால் பத்து நிமிடங்கள் கழித்து அதே அநுதாபம் ஹோட்டல் முதலாளியின் முகத்தில் தெரிகிறதா என்று பார்க்கிறேன். சுத்தமாக வழித்துப் போட்டதாகத் தெரிகிறது அது. வேண்டுமென்றே பைகளை நான் துழாவுவதைக் கண்டும் காணாத மாதிரி கடுகடுப்புடன், ''டேய் ராகவா! மாதவா!'' என்று உள்ளே பார்த்து அலறிக் கொண்டிருக்கிறார். கை மட்டும் என் பக்கம் கண்டிப்புடன் நீட்டியவாறு இருக்கிறது.

அது ஒரு காலம். ''நம்ம ஹோட்டலிலே அக்கவுண்ட் வையுங்கோ ஸார்'' என்று கெஞ்சியவர்தான் இந்த ஆள். அப்போதெல்லாம் சிரிப்புடன், பத்து பத்து ரூபாய்களாக நீட்டிச் சில்லறை வாங்குவேன் நான். இப்போது மட்டும் என்ன? கைப்பையிலிருந்து பத்து ரூபாய் தாள் ஒன்றை எடுத்து நீட்டினேன். முதலாளியின் முகத்தில் மலர்ச்சி வருகிறது. ''ஸார் சௌக்கியமா?'' என்று விசாரிக்கிறார், அப்போதுதான் என்னைப் பார்த்தவர் போல.

அனுராதா !

பஸ் ஸ்டாண்டில் நிற்கும் அவளைப் பார்க்கிறேன். அவள் என் மாஜி காதலி. நான் விடாமல் டெலிபோனில் காதலை வளர்த்து, 'ஒரு பெண்' என்ற நிலையையும், ஒரு பெண்ணுக்கான எல்லையையும் கடந்து பேசத் தெரிந்த சனியன். ஆனால் இப்போது....?

பஸ்ஸுக்காக உன்னிப்பாகக் கவனிக்கிறாளா? அல்லது என்னைப் பார்க்க விரும்பாத சாக்கா? நான் விட மாட்டேன். எனக்கு வெட்கம் கிடையாது. அவளை நெருங்கி நின்று கேட்கிறேன். ''என்ன அனு? ஆபீஸுக்கா?''

என் அண்மை அவளுக்குத் தவிப்பாயிருக்கிறது போலிருக்கிறது.

''ப்ளீஸ், எனக்கு வேறே இடத்திலே நிச்சயமாயிருக்கு.'' இரக்கமேயில்லாமலிருக்கிறது அவள் பேச்சு. ''நான் உங்களோடே பேசறது தெரிஞ்சா எங்காளு என்னைக் கொலையே பண்ணிடுவான். ப்ளீஸ் !'' என்றவள் சற்றுப் பொறுத்து மீண்டும் ''ப்ளீஸ்'' என்கிறாள்.

'ப்ளீஸ்' என்கிற ஆங்கில வார்த்தைக்கு, 'போய் வாருங்கள்' அல்லது 'நகருங்கள்' என்றும்கூட அர்த்தம் வருமா ? இரக்கமேயில்லாத பெண்கள் ! கோழை மனிதர்கள். பயந்த உள்ளங்கள். அவள் விரட்டினால் நான் போய் விடுவேனா ? மாட்டேனே ! வேண்டுமென்றே கேட்கிறேன். ''மாப்பிள்ளை என்னைவிட அழகாயிருக்கிறானா ?''

அவள் பேச்சிலிருந்த எரிச்சல் இப்போது அவள் கண்களில் இருக்கிறது. வந்து கொண்டிருக்கும் டாக்ஸியை நிறுத்துகிறாள்.

''வேண்டாம், அனு. என்னால் பணத்தை வீணாக்காதே. பஸ்ஸிலேயே போ. நான் போயிடறேன்.'' என் கூவலைக் கேட்க, அவளோ டாக்ஸியோ அங்கில்லை. எப்படியும் இரண்டு ரூபாய்களாவது வீணாகும். அந்தப் பணமிருந்தால்.... வறுமை புரளும் அவள் குடும்பத்தில் இரண்டு நாளைக்குக் கறிகாயுடன் சாப்பாடு கிடைத்திருக்கும்.

ஹூம். திமிர் பிடித்த இளமை. ஓடுகிறாள். ஓடட்டுமே. ஓடும் மனிதர்களில் அவளும் ஒருத்தி !

என் உதட்டிலிருந்த புன்னகை ஒரு விநாடியில் மறைகிறது. இதயத்தின் ஒரு மூலையில் ஏதோ இலேசாக வலித்தது. ஏன் என்னைக் கண்டதும் எல்லோரும் ஓடுகிறார்கள்?

போர்க்களத்தில் நெருப்புப் பட்டு முகம் கோரமாகி விட்டது உண்மைதான். ஆனால் இப்போது ஒன்றும் அவ்வளவு கோரமில்லையே. ப்ளாஸ்டிக் ஸர்ஜரிக்குப் பிறகு அப்படியொன்றும் மோசமில்லை. நான் அழகாகத்தான் இருக்கிறேன். மற்றவர் பார்வைக்கு நான் எப்படியோ, என்னைப் பொறுத்த வரையில் நான் மன்மதன்தான்.

நடக்கிறேன்.... நடக்கிறேன்..... நடந்து கொண்டே இருக்கிறேன்....

''யாரது?'' எனக்குப் பின்னால் குரல் கேட்கிறதா ? குயில் கூவுகிறதா ?

சாந்தி நின்று கொண்டிருக்கிறாள். பெரிய வீட்டு மருமகள் என்ற பளபளப்பு அவள் உடம்பின் ஒவ்வோர் அணுவிலும் தெரிகிறது. அந்தக் கண்களில் மட்டும் ஒரு சோகம் நிரந்தரமாகக் குடி இருக்கிறது. அவள் கல்யாணத்துக்குப் பிறகு இப்போதுதான் அவளையே பார்க்கிறேன். அவளா. நன்றாகத்தான் மெருகு ஏறியிருக்கிறது.

# புதியது!

## தலைவலியைப் போக்க உபரி வலிமையுள்ள வலிநிவாரணி

# பவரின்

**பவரின்** டாப்யூல்* வலியை முறியடிக்கிறது.

தலைவலி, தசை வலி, பல் வலி,
ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றால்
ஏற்படும் அவதிகளைச் சக்தியுடன்
அபாயமற்ற முறையில் எதிர்க்கிறது.

*விழுங்க எளிதான ஓர் காப்ஸ்யூல் வடிவ வில்லை.
ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்: ஜெஃப்ரி மானெர்ஸ்
& கம்பெனி லிட்.




PW-5-152 TM

என்னை உச்சி முதல் உள்ளங்கால் வரை பார்த்தவள் விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள். "உஸ்... சாந்தி. இது நடுத் தெரு" என்று அவளை அடக்க வேண்டியது என் பொறுப்பாகிறது.

"என்னோட வாங்க. உங்களோடு கொஞ்சம் பேசணும்" என்று அவளது கெஞ்சலுக்குச் சம்மதித்தே ஆகவேண்டியிருக்கிறது. படகுக் காரின் பின்னால் நான் சிரமத்துடன் ஏறி அமர, டிரைவரைப் போகச் சொல்லிவிட்டு, தானே காரோட்ட ஆரம்பித்தாள். ஊர் எல்லையைக் கடந்து கொண்டிருக்கும் போது நான் கேட்கிறேன். "சாந்தி! வீட்டுக்காரர் சௌக்கியமா?"

என்னைத் திரும்பி அவள் பார்த்த பார்வை! நான் நடுங்கிப் போய், "சாந்தி! ரோட்டைப் பார்த்து ஓட்டு" என்று நான் அலறியிருக்கா விட்டால் தெருவோடு ஓடிக் கொண்டிருந்த அந்த நாய் கூழாகியிருக்கும்.

"வீட்டுக்காரரைப் பற்றிக் கேட்பதை விட வீட்டுக்காரங்களைப் பற்றிக் கேட்டால் பதில் சொல்லச் சுலபமாயிருக்கும். ஒண்டுக் குடித்தனத்திலே அவதிப்பட்ட என் குடும்பம் இப்ப பங்களாவிலே வசிக்குது. மருமகன் வாங்கித் தந்த துணிக் கடையிலே எங்க அப்பாவுக்கு நல்ல வருமானம். கஞ்சியே ஆனாலும்கூட வயிறு நிரம்பச் சாப்பிட மாட்டோமான்னு ஏங்கிக் கிடந்த எங்க குடும்பம், இப்ப ஸ்வீட் இல்லாமல் சாப்பிடறதேயில்லே. பொரியல், கூட்டு, கறின்னு வாய்க்குச் சுவையாத்தான் சாப்பிடறாங்க. வெறும் எஸ். எஸ். எல். சி.யாவது படிக்க மாட்டானா? என்றிருந்த என் தம்பி இப்ப டாக்டருக்குப் படிக்கிறான். ஆனால் நான்..." அவள் கண்களில் முத்துக் கோத்தாற்போல் நீர் ததும்பியது. "எந்த அழகைக் கண்ணாடியிலே பார்த்துப் பார்த்துப் பூரிச்சேனோ... எந்த அழகைப் பார்த்து மத்த பெண்களெல்லாம் பொறாமைப்பட்டாங்களோ... எத்தனை எத்தனை வாலிப உள்ளங்களை ஏங்கி ஏங்கித் தவிக்கச் செய்ததோ, அந்த அழகை, என் பெண்மையை ஓர் அறுபது வயசுக் கிழவருக்கல்லவா தாரை வார்த்தேன். இப்போது அந்த வேதனைத் தீயிலே துடிக்கிறேன்."

"பெரிதாகத் தியாகம், பொறுப்பு என்றியே, விரும்பி வந்த என்னையே உதறிவிட்டாயே, இப்ப ஏனம்மா அழறே?" நாக்கு நுனி வரை வந்துவிட்ட கேள்வியை அத்துடன் தடுத்து நிறுத்துவது எனக்குச் சிரமமாயில்லை. "பாவி. உன்னாலேதான் மனசு வெறுத்துப் போய்ப் பட்டாளத்துக்குப் போனேன்" என்று குற்றம் சாட்டி என் நெஞ்சுதான் கதறியது.

கார் மீனம்பாக்கத்தைக் கடந்து கொண்டிருந்தது.

"என்னாலே இந்த வேதனைத் தீயிலே வேக முடியாது. எனக்கு விடுதலை தேவை. அதனாலேதான் உங்களைச் சந்திக்கணும்னு துடிச்சேன்."

"என்னைச் சந்திக்கத் துடிச்சியா? ஏன்? எதுக்காக?"

"உங்க பழைய கனவுகளைப் புதுப்பிக்க.... உலர்ந்து போன என் வாழ்க்கையைச் சத்துள்ளதாக்க. பெற்றோர், உற்றோர் எல்லாரை



"என் மடியிலே வச்சிருந்த ரூபாயை' எவனோ 'பிக்பாக்கெட்' அடிச்சுட்டானுங்க!"

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

யும் உதறிவிட்டு நானும் உங்களைப் போலவே அநாதையா வந்துடறேன். வாங்க, நாம் எங்கேயாவது போய் நிம்மதியா வாழலாம்."

"சாந்தி!" குமுறினேன் நான். "என்ன சொல்றே, நீ?"

"ஓடிப் போகலாம்னு சொல்றேன்."

"அடிப் பாவி!" என்னால் சிரிப்பை அடக்கவே முடியவில்லை. "என்னைப் பார்த்து ஓடி வான்னு சொல்றியே, அது எப்படி முடியும்? மத்தவங்க ஓடறதைப் பார்த்துச் சிரிக்கிறவனாச்சே நான்." என் சிரிப்பு சட்டென்று தடைப்பட்டுக் கண்கள் கலங்குகின்றன. கையிலிருந்த நீண்ட கட்டைவிரலால் அவள் தோளைத் தட்டுகிறேன். "சாந்தி! விதி விளையாடுதுன்னு நினைக்கிறேன். ஒரு காலத்திலே ஓடிப் போகலாம்னு நான் சொன்னேன். நீ வரவில்லே. இப்ப நீ கூப்பிடறே? ஆனால் என்னால் ஓட முடியாத நிலை. என்னாலே ஓட முடியாது. நான் நொண்டி சாந்தி. என்னாலே ஓட முடியாது."

கார் நின்றது. ஸ்டியரிங் வீலின் மீது முகத்தைப் புதைத்து அழுகிறாள் அவள்.

"சாந்தி. நாட்டுக்குச் சேவை செய்யணும்கிற நல்ல எண்ணத்தோடேதான் நான் ராணுவத்துக்குப் போனேன். ஆண்டவன் ஏன் என்னை நொண்டியாக்கி விட்டான்னு நான் நினைக்கப் பார்த்ததுண்டு. இப்ப புரியுது. எங்கே நீ கூப்பிட்டு, உன் குடும்ப கௌரவத்தைக் கெடுக்கிற வகையிலே நானும் உன்னோடே ஓடிப் போயிடுவேனோன்னு, பயந்துதான் போலிருக்கு. ஆண்டவன் என் காலை ஒடிச்சிட்டான்."

"போயிடுங்க. தயவுசெய்து இறங்கிப் போயிடுங்க." அவள் கதறல் நெஞ்சைப் பிழிய, இறங்கியவன் கவனித்தேன். அது குரோம்பேட்டைக்குப் பக்கத்தில் ஏதோ ஓர் இடம். 'வந்ததுதான் வந்தோம். சண்முகநாதனையும் பார்த்து விட்டுப் போகலாமென்று நடந்தேன். அவனும் என்னோடு

ராணுவத்தில் இருந்தவன்தான். எனக்குப் போனது கால் மட்டும். அவனுக்கு நெஞ்சிலே அடி. விலா எலும்பை ஆபரேஷன் செய்துதான் எடுத்தார்கள். பாவம், எப்படி யிருக்கிறானோ ?

குரோம்பேட்டையை நோக்கி நகரும் போது என் நடையில் எனக்கே சந்தேகம் ஏற்பட்டது. நடை தளருகிறதா ? நிமிர்ந்த நெஞ்சு ஏன் தொய்கிறது ?

வீடு பூட்டியிருக்கிறது. தூணிலே சாய்ந்த வாறு எவ்வளவு நேரமிருந்தேனோ....

''வா, தம்பி!'' பாட்டியின் குரல் கேட்டுக் கண் திறந்தேன்.

''ஷண்முகத்தைப் பார்த்துட்டுப் போக லாம்னு வந்தேன் பாட்டி !''

''அப்பாவைப் பார்க்க வந்தீங்களா, மாமா ?'' ஷண்முகத்தின் பெண் பாமா சிரிக்கிறாள். அவள் இடுப்பில் ஒரு வயதுக் குழந்தை. ''நீங்க மூணு நாள் லேட். அப்பா போய் மூணு நாளாகிறது.'' அவளது வெடுக் வெடுக்கென்ற பேச்சைக் கேட்பதற் காகவே நான் அங்கு வருவதுண்டு. ''அப்பா உங்களைப் பத்தி அடிக்கடி சொல்லுவார். மூணு பாட்டன் டாங்கிகளைச் சும்மா தூள் பறக்க விட்டீங்களாமே !''

'' பாவி மனுஷன். இரண்டுத்தையும் அனாதையாக்கிட்டுப் போயிட்டானே !''— தரையில் அமர்ந்த பாட்டியின் ஒப்பாரி ஆரம்பமாயிற்று. ''நான் பொன்னுபோலே கூடு கட்டி... பூவாலே போர்த்தி வைச்சேன். என் கண்ணே !''

''இந்தப் பாட்டி இப்படித்தான். புதுசா யார் வந்தாலும் உடனே அழ ஆரம்பிச்சுடு ருங்க'' என்ற பாமா குழந்தையை என் மடியிலிருத்திப் பூட்டைத் திறந்தாள். ''உள்ளே வாங்க, மாமா ! இனிமேல் எங்களுக்கு நீங்க துணை. உங்களுக்கு....''

''எனக்கா பாமா? இதோ இதுதான் துணை'' கையிடுக்குக் கட்டையைக் காட்டுகிறேன்.

''காட்டெருமை ஏறிக் கொண்டு, காத் தோட வந்தானோ?'' பாட்டியின் ஓலம் நிற்க வில்லை. தொடர்ந்தது. ''கயத்தோட உன் உயிரை — பாவி கொண்டு போனானோ ?''

நெருங்கி வந்த பாமா, கட்டையை ஒதுக்கிவிட்டு, என் கையிடுக்கில் தனது தோளைக் கொடுத்து நிறுத்தினாள். ''ப்ளீஸ்!' மெதுவா நடந்து வாங்க, மாமா!''

புல்லரித்தது எனக்கு. சாந்தி, 'ஓடி வா' என்றாயே! இதோ பார்த்தாயா ? 'நடந்து வா' என்று சொல்லுகிற துணை கிடைத்து விட்டது எனக்கு. அம்மா தாயே, அனு ! 'ப்ளீஸ்!' என்றுதான் இவளும் சொல்கிறாள். இவள் சொல்லும் 'ப்ளீஸ்'தான் சரியான அர்த்தத்துடன் வருகிறது. டேய், சத்தியா! எங்கே ? இப்ப வந்து என்னை அனாதைன்னு சொல்லு பார்க்கலாம். போடா, போடா.

கலங்கிய கண்களுடன் நெடுஞ்சாலையைப் பார்க்கிறேன். உரித்தெறிந்த பழத்தோல் போல் சாலை வெறிச்சோடிக் கிடக்கிறது.

விரைவு வண்டி இல்லை. அதைத் தொடர்ந்து போட்டியிட லாரி இல்லை. சைக்கிள்களின் கிண் கிணி ஓசை கனவு போல இருக்கிறது. நடமாடும் மனிதர்கள்.... ஓடும் மனிதர்கள். எதுவும் இங்கில்லை. இங்கில்லா விட்டாலும் எங்கோ இருக்கத்தான் செய்கிறது. அதனாலென்ன ?

ஓடும் மனிதர்கள் ஓடட்டும். நான் ஓடத் தேவையே இல்லை.

## கரும்பு தடுக்கியது: உயிர் தப்பியது!

1952 என்று நினைக்கிறேன். நான் என் நண்பர் களுடன் சீரடி சென்றுவிட்டுத் திரும்பிக் கொண் டிருந்தேன் ரயிலில். ரயில் நிஜாமாபாத் என்ற ஊரை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது மழைக்காலம். கும்மிருட்டு. வண்டி நிஜாமாபாத் தில் நின்றவுடன், உடம்பு சரியில்லாதிருந்த நண்பர் ராஜகோபாலனுக்குப் பாலும் மாத்திரை யும் கொடுக்கவேண்டும் என்று எண்ணினோம்.

வண்டி மெதுவாகச் செல்ல ஆரம் பித்தது. ஊர் நெருங்கிக் கொண் டிருக்கிறது என்று நினைத்த ஒரு நண்பர் கூஜாவைத் தூக்கிக் கொண்டு இறங்குவதற்கு ஆயத்தமானார். வண்டி நின்று விட்டது.



வெளியே ஒரே இருட்டாக இருந் தது. மழையினால் மின்சாரக் கோளாறு ஏற்பட்டிருக்கும் என்று நினைத்த நண்பர் பால் வாங்கிவர இறங்கினார்.

பத்து நிமிடமாகியும் அவர் வராத தால் இன்னுமொரு நண்பர் வண் டியை விட்டு இறங்கினார். அவரை யும் காணவில்லை.

வண்டி புறப்பட்டுவிடுமே என்று பயந்த நான் அவர்களைக் கூப்பிடு வதற்காக இறங்கப் போனேன். கதவருகில் ஒரு கட்டுக் கரும்பு வைக்கப்பட் டிருந்தது. அது இடறி வலது கால் செருப்பு வெளியில் விழுந்தது.

விழுந்ததும் 'தொப்' என்று சத்தம் கேட்டது. வியப்படைந்த நான் உற்றுக் கவனித்ததில் வண்டி ஓர் ஆற்றின் மேல் உள்ள பாலத்தின் மீது நின்றிருப்பதையும் பாலத்தின் மேல் நிறைந்து நீர் செல்வதையும் கண்டு திகைத்தேன்.

வண்டி பின்னுக்கிழுக்கப்பட்டுத் தர்மாபாத் என்ற ஊரில் நின்ற வுடன் அதிகாரிகளுக்குத் தெரியப் படுத்தி வெள்ளத்தில் விழுந்து விட்ட நண்பர்களைத் தேட வேண்டிக் கொண்டேன். பின்பு அவர்கள் தர்மாபாத்தில் உள்ள சரஸ்வதி கோவிலுக்கு வந்திருந்த யாத்திரி கர்களால் காப்பாற்றப்பட்டு விட்ட னர் என்பதை அறிந்து சீரடி சாயி நாதனுக்கு நன்றி தெரிவித்தோம்.

நானும் வண்டி ஸ்டேஷனில் தான் நிற்கிறது என இறங்கப் போனேன். கடவுள் அருளால் கரும்பில் கால் தடுக்கியது. அதனால் நானும் ஆற்றில் விழா மல் தப்பித்தேன். வண்டியிலிருப் போரையும் உஷார் செய்தேன்.

— இ. வேணுகோபால்

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரீஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரீஸ் போர்ன்விடா.**

# ஆண்டவன் வருவான்

## ''ஆண்டவன் வருவான்!''

காந்தியடிகள் ஒரு கோயிலுக்குச் சென்றிருந்தார். கோயில் அர்ச்சகருக்கு ஏகச் சந்தோஷம். ''பாபுஜி! தங்களுக்கு என்மீது எத்தனை கருணை! பூஜை நேரத்துக்கு வந்தீர்களே! இல்லாவிட்டால் இப்படி அருகில் நின்று தங்களைத் தரிசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டுமா? — ஆமாம், தாங்கள் நாளைக்கும் வருவீர்கள் அல்லவா?'' அர்ச்சகர் பூஜையை மறந்து கேட்டார்.



காந்தியடிகள் குறுநகையோடு, ''இதோ பாருங்கள்! நான் வந்தாலும் வராவிட்டாலும் ஆண்டவன் கட்டாயம் வருவார். அவரை ஒருமைப்பட்ட மனத்துடன் வழிபடுங்கள்!'' என்றார்.

அர்ச்சகருக்கு அந்த உபதேசம் கைத்திருக்குமோ, தைத்திருக்குமோ?

## கொம்பு முளைத்தது!

காந்தியடிகள் அப்பொழுது இளைப்பாறும் நேரம். அவரைக் காண வந்தவர்களோ போவதா யில்லை. ஏதாவது பேச்சுக் கொடுத்துக் கொண்டே யிருந்தனர். அவர்களை எழுந்து போய்விடுங்கள் என்று எப்படிச் சொல்வது? காந்திஜி தயங்கினார்.

பேச்சுவாக்கில் ஒருவர் கேட்டார்: ''ஏன் பாபூஜி! பால் மனிதன் உணவில்லையே! பிள்ளைப் பிராயத்தில் தாய்ப் பால் வேண்டுமானால் சிறிது காலத்துக்கு உணவாகப் பயன்படலாம். பெரியவர்களான பின் ஆவின் பாலையோ, ஆட்டின் பாலையோ அருந்துவது நியாயமா? — நீங்கள் ஆட்டுப் பால் அருந்துகிறீர்கள். அதுகூட எனக்கு உசிதமாகப் படவில்லை. ஆவின் பாலோ, ஆட்டின் பாலோ சாப்பிடுவதனால் மிருக குணம் வந்து விடுமாம்!''



இதுதான் சரியான சமயம் தம்மை விடுவித்துக் கொள்வதற்கு என்று எண்ணிய காந்திஜி, ''அடாடா! இத்தனை நாளும் எனக்கு இது தெரியாமல் போய்விட்டதே! ரொம்ப நாளாக எனக்குத் தலையை அரித்துக் கொண்டிருக்கிறது. காரணம் இப்பொழுதுதான் தெரிகிறது. எனக்குக் கொம்பு முளைக்கிறது. ஆட்டின் பாலைக் குடிக்கிறேன் அல்லவா? இனி மேல் கிட்ட நின்றால் கொம்பினால் முட்டித் தள்ளி விடுவேன். ஓடுங்கள்!'' என்றார். —வீ.

## காந்திஜியும் ஜின்னாவும்

மகாத்மா காந்தி 249 நாட்கள் ஆப்பிரிக்க சிறைச்சாலைகளிலும் 2089 நாட்கள் இந்தியச் சிறைச்சாலைகளிலும் இருந்திருக்கிறார். காங்கிரஸ் — முஸ்லிம் லீக் உடன்படிக்கைக்காக காந்திஜி முயன்று கொண்டிருக்கும்போது, அவர் ஜின்னாவுக்குப் பல கடிதங்கள் எழுதி யிருக்கிறார். அவர் ஒவ்வொரு கடிதத்திலும் சகோதரர் ஜின்னா என்று குறிப்பிட்டு, தங்கள் சகோதரன் காந்தி என்றே கையொப்பம் இடுவார். ஆனால் ஜின்னா தம் கடிதங்களில் 'மிஸ்டர் காந்தி' என்றே அழைத்து, 'எம். ஏ. ஜின்னா' என்றே கையெழுத்திடுவார்.

ஆதாரம்: இல்லஸ்டிரேட்டட் வீக்லி
தமிழாக்கம்: சரோஜா நரசிம்மன்

## மாபெரும் வாப்பிரசாதம்

1942ம் ஆண்டு இயக்கத்துக்கு முன்னேற்பாடு நடந்து கொண்டிருந்தபோது ஒருமுறை நான், ''அஹிம்சைக்கும் சத்தியத்துக்கும் சரியான விளக்கம் எதுவாக இருக்க முடியும்?'' என்று மகாத்மாவைக் கேட்டேன்.

சட்டென்று மகாத்மா பதில் அளித்தார்: ''உண்மையைக் கேட்டால், சத்தியமும் அஹிம்சையும் சொல் இலக்கணத்துக்குள் அடங்காதவை. சொற்களினால் அவற்றை விளக்கவே முடியாது. ஒவ்வொரு மனிதனும் உண்மையான மனத்துடன் நடந்து கொண்டால், அந்தராத்மாவின் ஆணையை உணர்ந்து கொள்ள முடியும். இந்தச் சக்தியைக் கருணை கூர்ந்து நமக்கு இயற்கை அளித்துள்ளது. இது நமக்குக் கிடைத்துள்ள மாபெரும் வரப்பிரசாதமாகும்'' என்றார்.

நாம் கண்ணாரக் கண்டோம் இந்த நிகழ்ச்சியை. பாரதத்தில் பிரிட்டிஷ்சாம்ராஜ்யம் மாபெரும் தோல்வி கண்டது. அந்தத் தோல்வி, மானிட வரலாற்றிலேயே உண்மைக்கும், அஹிம்சைக்கும் கிட்டிய மாபெரும் வெற்றியாகும்.

—ஸைபத் ஹமீத் அலி

# படித்துப் பாருங்கள்

## ஷண்மத நூல்கள்

சமீபத்தில் சென்னையில் 'சங்கரர் ஷண்மத மகாநாடு' கோலாகலமாக நடைபெற்றதை நாடறியும். நீண்ட காலமாகவே ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களின் ஷண்மத ஸ்தாபனப் பணியைப் பாரறியச் செய்வதில் ஆர்வத்துடன் இருந்து வந்திருப்பவர் 'செந்தில் துறவி'. இவ்விஷயமாகக் கட்டுரைகள் எழுதியும், சிறப்பான சித்திரங்கள் எழுதச் செய்தும் வெளியிடுவதில் ஊக்கத்துடன் இருந்து வந்திருக்கிறார்.

தற்போது செந்தில் துறவி ஷண்மதங்களான காணபத்தியம், கௌமாரம், வைஷ்ணவம், சௌரம், சாக்தம், சைவம் ஆகிய ஆறு சமயங்கள் குறித்தும் தனித் தனியாகக் குறைந்த விலையில் சுவாரஸ்யமான சிறு நூல்கள் எழுதியுள்ளார். இம்மதங்களின் அதிதேவதைகளைப் பற்றிய பெருமைகளை அறியப் புதுப் பிரசுரங்கள் மிகவும் உதவி புரியும். மகிமை வாய்ந்த துதிகளும் உள்ளடக்கப்பட்டுள்ளன. அழகான அட்டையே வாங்கத் தூண்டுதலாக இருக்கிறது.

ஆண்டொன்றுக்குப் பதினெட்டு ரூபாய் சந்தாவாகச் செலுத்திப் பன்னிரண்டு நூல்கள் பெறும் திட்டத்தில் இவ்வாறு நூல்களைப் பெறலாம். அல்லது தலா ரூ. 1.50 செலுத்தியும் படித்துப் பயன்பெறலாம்.

வெளியீடு: சாஸ்தா பதிப்பகம், 50, கிழக்கு ரத வீதி, திருச்செந்தூர். கிடைக்குமிடம்: 4-1, போயஸ் சாலை, சென்னை—18.

## அறிஞர் அண்ணா மலர்

“நான் எனது காலத்தில் என்னால் முடிந்ததைச் செய்வேன். எனக்குப்பின் வருபவர்கள் அவர்களால் இயன்றதைச் செய்வார்கள். இது (ஆட்சி) தொடர்கதையே தவிர தனித் தனி சிறுகதை அல்ல!”

இப்படி அழகாகக் கூறியவர் அறிஞர் அண்ணா. தமிழ் நாட்டின் ஆட்சி என்ற தொடர்கதையில் அண்ணா எழுதிய அத்தியாயம் மிகச் சிறியது. ஆனால் கதையில் ஒரு திருப்பு முனையாக அமைந்திருந்தது அது. சிறிய அத்தியாயமானாலும் கதையின் ஓட்டத்துக்கு மிகவும் உதவியதுடன் இலக்கிய நயமும் நிரம்பப் பெற்றுத் திகழ்ந்த அத்தியாயம்.

அந்த அத்தியாயத்தைப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்கள், கிராம நலம் பிப்ரவரி '69 இதழிலே. சிறந்த முறையில் அச்சாகியுள்ள ஏராளமான புகைப் படங்களுடன் அமரர் அண்ணா மலராக வெளியாகியிருக்கிறது.

வெளியீடு: கிராம வளர்ச்சி இயக்குனர் அலுவலகம், கோட்டை, சென்னை - 9; விலை: ரூ1.00.

## Journal of Tamil Studies

அகில உலகத் தமிழ் மகாநாடு சென்னையில் நடந்ததை இதற்குள் யாரும் மறந்திருக்க முடியாது. சர்வ தேச தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தின் சார்பிலேதான் நடைபெற்றது அம் மகாநாடு. மகாநாடு முடிந்து அடுத்த மகாநாடு தொடங்கும்வரை சும்மா இராது கழகம் பல அரிய தொண்டுகளைத் தமிழுக்காகச் செய்து வருகிறது. அவற்றுள் ஒன்று “ஜர்னல் ஆப் டமில் ஸ்டடீஸ்” என்ற ஆங்கில வெளியீடு. ஆண்டுக்கு இரண்டு தடவைகள் வெளிவரும் இந்தச் சஞ்சிகை புத்தகம் போல் காட்சி தந்து கவர்கிறது.

‘ஹீப்ரு மொழிக்குப் புது வாழ்வு” என்று ஒரு கட்டுரை. தமிழ் ஆராய்ச்சிக்கிடையில் ஹீப்ரு மொழி எங்கே வந்தது என்று ஆச்சரியப்பட்டுப் படிக்க ஆரம்பிப்போமானால் தமிழ் வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட அனைவரும் படிக்க வேண்டிய கட்டுரை என்று புரிந்து கொள்வோம்.

பல நாடுகளிலும் உள்ள தமிழறிஞர்கள் விரும்பிப் படிக்கக் கூடிய கட்டுரைகள் இடம் பெற்றிருப்பதால் ஆங்கிலத்திலேயே வெளிவரும் இந்தப் பத்திரிகை சர்வதேச ஆசிரியர் குழாத்தைக் கொண்டிருப்பது பொருத்தமே.

“இருபதாண்டு தமிழ் ஆராய்ச்சி” என்ற தலைப்பில் தனிநாயகம் அடிகளும் “தமிழ் நாட்டில் கட்டிடக் கலை” என்ற தலைப்பில் ஆர். நாகசாமியும் எழுதியுள்ளார்கள். மற்றும் பல ஆராய்ச்சிப் புலமை மிக்க கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

ஆராய்ச்சி பூர்வமான கட்டுரைகளுக்கு இடையில் தமிழ் ரசிகர்க்கென்றே ஓரிரு கட்டுரைகளும் இடம் பெற்றால் சுவை கூடும்.

வருட சந்தா: ரூ. 20. தனிப் பிரதி 12.50.

விலாசம்: V. I. Subramaniam, Associate Chief Editor, Journal of Tamil Studies, University of Kerala, Trivandrum.

## ஆலய தரிசனம்

பத்ராசலம் — பண்டரிபுரம் — திரியம்பகம் — பஞ்சவடி — ஷீரடி — மந்த்ராலயம் ஆகிய சொற்களைக் கேட்டவுடனேயே ரோமாஞ்சனம் அடைகிற பக்தர்கள் நம் நாட்டில் உண்டு. பத்ராசல ராமதாஸர், புண்டரீகர், சோகாமேளர், நாமதேவர், ஞானேசுவரர், ஏகநாதர், துகாராம், சமர்த்த ராமதாஸ், சாயிபாபா, ராகவேந்திர ஸ்வாமிகள் ஆகிய மகாபுருஷர்களின் தொடர்பு கொண்ட புனிதப் பதிகள் இவை. இந்தத் திவ்விய தேசங்களுக்கு நம்மை அழைத்துச் சென்று திவ்விய தரிசனம் செய்து வைக்கிறார் நூலாசிரியர். அவற்றுடன் இரண்டறப் பின்னிப் பிணைந்த உத்தமர்களின் சரித்திரத்திலும் நம்மை முழுகித் திளைக்க வைக்கிறார். முக்கியமாக சாயிபாபா பற்றியும், ராகவேந்திர சுவாமிகளைப் பற்றியும் விரிவாகவும் உருக்கமாகவும் எழுதி, அவர்களிடம் நம் இதயத்தை அப்படியே ஈடுபடுத்தி விடுகிறார்.

தங்கு தடையின்றிச் சரளமாக ஓடும் நடை. பிரயாணக் கட்டுரையின் தொகுப்பானபடியால் யாத்திரிகர்களின் அநுபவங்கள் சம்பாஷணைகள் யாவும் நுண்ணிய நகைச்சுவை உணர்வுடன், யாத்திரை இலட்சியமான உன்னத உணர்வைப் பாதிக்காத வகையில், பாங்காகக் கலந்தளிக்கப்பட்டிருக்கின்றன.

புகைப்படங்கள், அச்சு எல்லாம் ஜோராக உள்ளன. மக்கள் ரசித்துப் படித்துப் பயனடையலாம்.

ஆசிரியர்: பரணீதரன்; வெளியிட்டோர்: வாசன் எண்டர்பிரைஸஸ்; விற்பனைக்கு வழங்குவோர்: ஆனந்த விகடன், 151, மவுண்ட் ரோடு, சென்னை—2; விலை ரூ. 1.50.



## நீரின்மேல் நடக்கலாமே!

கடல் அலையின் மேல் நடக்க முடியுமா? நடந்து காட்டியுள்ளார் ரஷ்யர் ஒருவர்! லெவின் என்பவர் சர்வ சாதாரணமாகக் கடல் அலையின் மீது நடக்கிறார்! இதற்கு அவர் பிளைவுட் பலகையினாலான பூட்ஸ்களை அணிந்து கொள்கிறார். அத்துடன் பனிக்கட்டியின் மீது சறுக்கி விளையாடும்பொழுது உபயோகப்படுத்துவது போன்ற கோல்களைக் கரங்களில் பற்றிக் கொண்டு நடப்பதால் 'பாலன்ஸ்' இழக்காமல் நடக்க முடிகிறதாம் அலையின் மேல்!

தகவல்: ச. ஸ்ரீதரன்

ஆதாரம்: 'சோவியத் யூனியன்'.

---

'வெனிசூலா' நாட்டில் ஒரு வீட்டில் நுழைந்த திருடன், சுருட்டிக் கொண்டுபோக ஒன்றுமில்லாது விழித்தபோது அங்கிருந்த ஓர் அலங்கார மேஜையின்மீது அவனுக்காகவே எழுதப் பட்டது போன்ற ஒரு குறிப்பைக் கண்டான். அதில், "மேல்டிராயரில் பணம் இருக்கிறது" என்று எழுதப்பட்டிருந்தது. அதன் பிறகு திருடனுக்குச் சொல்லித் தரவா வேண்டும்?



இப்படி ஒரு குறிப்பை எழுதி வைத்து விட்டுச் சென்றவர் 'கார்மன் லாரா' என்ற பெண்மணி. வெளியே போயிருக்கும் தனது கணவனுக்காக இப்படி ஒரு குறிப்பு எழுதி வைத்து விட்டுச் சென்றாள்! விளைவு: திருடனுக்குச் சுலபமாக 500 டாலர் கிடைத்தது!

ஆதாரம்: "ஹிந்துஸ்தான் டைம்ஸ்"

தகவல்: வி. சம்பத்குமார்



---

நம்மைப் போலவே 'பழம், தேன், இனிப்புப் பண்டங்களை நிவேதனம் செய்யும் வழக்கம் பர்மியர்களிடமும் காணப்படுகிறது. ஆனால் ஒரு வித்தியாசம்! பகவானுக்கு நைவேத்தியம் செய்த பொருள்களைப் புனிதமாகக் கருதி, அவற்றை நாமும் உட்கொள்கிறோம். அவர்கள் அப்படிச் செய்வதில்லை. 'பிரசாதப் பொருள்களை ஆற்றில் எறிந்து விடுகிறார்கள். 'ஏன் அப்படிச் செய்கிறீர்கள்?' என்ற கேள்விக்கு அவர்கள் கூறும் பதில்: "உங்களுக்கென்று பரிசாக ஏதேனும் கொடுக்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அது உங்களுடையதானபிறகு, அதைப் பங்கு போட்டுக் கொள்ள எனக்கு என்ன உரிமை உண்டு? அதே போல் பகவானுக்குப் படைத்த பொருளைப் பங்கு போட்டுக் கொள்ள நமக்கு உரிமை இல்லை. ஆகவே, கடலிலோ, ஆற்றிலோ எறிவதுதான் எங்கள் வழக்கம்."



தகவல்: ஜுபிடர் ஆதாரம்: "பர்மாவில் வாழ்க்கை" என்ற நூல்.

---

## கடுமைப் பயிற்சி!

டோக்கியோ நகரில் டாக்ஸி ஓட்டுநர்களுக்குக் கார் ஓட்டத் தெரிந்தால் மட்டும் போதாது. குத்துச் சண்டையும் ஜூடோவும் கற்றுத் தரப் படுகிறது. கழுத்தில் மாட்டிக் கொண்டு பெரிய டயர்களைத் தூக்கும் பயிற்சியும் கொடுக்கிறார்கள். விபத்து நிகழ்ந்தால் கழுத்து எலும்பு பிழைத்துக் கொள்ள இந்தப் பயிற்சி.

"டெய்லி மிரர்" - முத்து

---

## ஏன் ஓடுகிறாய்?

பிரான்ஸ் நாட்டில் உள்ள பாரிஸின் கடை வீதியில் ஒருவன் கையில் ஒரு பாக்கெட்டுடன் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த மற்றொருவன், "ஏனப்பா, இவ்வளவு அவசரமாக ஓடுகிறாய்?" என்று கேட்டான். அதற்கு அவன், "ஐயா! நான் என் மனைவிக்கு "ஃப்ராக்" வாங்கிக் கொண்டு போகிறேன். இதை எடுத்துப் போய் அவளிடம் கொடுப்பதற்குள் இன்றைய நாகரிகம் மாறி விட்டால், இதை எடுத்து என் முகத்தைப் பார்த்து வீசி எறிந்து விடுவாளே! அதற்காகத்தான் இவ்வளவு அவசரமாக ஓடுகிறேன்!" என்றானாம் அவன்.



பிரதம நீதிபதி திரு வீராசாமி அவர்கள் ஒரு விழாவில் கூறியது.

- கோ. சந்திரசேகர ராவ்

# கௌரவம்

தமிழ்முடி

சென்னை எழும்பூர் புகைவண்டி நிலையத்திலே 'எக்ஸ்பிரஸ்' வந்து நின்றதும் அவசரம் அவசரமாக இறங்கினார் ''ஏழை ஆசிரியர்''. அப்பொழுது அவருக்குப் பசி அபாரமாக இருந்தது. ஏதாவது ஓர் ஓட்டலுக்குப் போக விரும்பினார். ஆனால் உடனே போகவில்லை. அவர் சென்னைக்கு முற்றிலும் புதியவர். முதன் முதலாக அப்பொழுதுதான் சென்னைக்கு வந்திருந்தார்.' அதனாலே நல்லது எது, எங்கே இருக்கிறது என்று புரியாமல் அங்குமிங்குமாகப் பார்த்தபடியே நடந்து கொண்டிருந்தார்.

ஏழை ஆசிரியருக்கு இயற் பெயர் வேதாந்தம் என்பதாகும். ஆனாலும் 'ஏழை ஆசிரியர்' என்ற பெயரே இயற்கைப் பெயர் போல நிலைத்து விட்டது. அதற்குக் காரணம் இருந்தது.

வேதாந்தம் நன்கு படித்தவர். நல்ல எழுத்தாளர். மக்கள் சமுதாயத்தின் பல நோய்க்கு மருத்துவர் போன்றவர் எழுத்தாளர்கள்தாம் என்பது அவரது திடமான கருத்து. நல்ல முற்போக்கும், கற்பனைத் திறனும் மொழி வளமும் உடைய முதல் தரமான எழுத்தாளர்.

அதனாலே அவர் தமக்கென்று, தமது கருத்துக்களை உரிமையோடு வெளியிடுவதற் கென்று சொந்தமாகவே ஒரு பத்திரிகையை ஏற்படுத்திக் கொண்டார். அந்தப் பத்திரிகையின் பெயர்தான் ''ஏழை'' என்பது.

பத்திரிகையின் பெயர் ஏழை என்றாலும் அதில் வரும் கதை, கவிதை, கட்டுரை, நாவல் முதலிய எல்லா அம்சங்களுமே நவரத்தினக் களஞ்சியம் போலத் திகழ்ந்தன. ஒவ்வோர் எழுத்தாளனும் 'ஏழை'யில் எழுதுவதையே பெரும் பரிசாகவும், மதிப்பாகவும் கருதினான். அந்த அளவுக்கு ஏழையை உயர்த்தி விருந்தார் வேதாந்தம்.

இந்த நாட்டிலே பெரும்பான்மையான மக்கள் வசதி அற்ற ஏழைகள். ஆனால் அத்தகைய வசதியற்ற ஏழைகளாலேதான் வசதி பெற்ற மக்கள், வசதி குறையாமல் மேலும் மேலும் வசதியைப் பெருக்கிக் கொண்டு வாழ முடிகிறது.

வண்டி இழுத்தும், வயல் உழுதும், ஏற்றம் இறைத்தும் அரும் பாடுபட்டும், நெல் முதலிய தானியங்களை விளைவிக்கக் காளை மாடுகள் கடும் உழைப்புச் செய்கின்றன. ஆனாலும் அந்த மாடுகளுக்குக் கிடைப்பது கிடைக்கும்படி செய்வது உலர்ந்த வைக்கோல் போன்றவையாகும்.

ஆனால் நமக்குக் கிடைப்பதோ உயர்ந்த நெல் முதலிய தானியங்களாகும்.

தென்னை மரத்தின் வேர்ப் பாகத்திலே சாக்கடை போன்ற அழுக்கு நீரையும் ஊற்றி வளர்க்கிறோம். என்றாலும் அது திரும்பச் சாக்கடை நீரை நமக்குத் தருவதில்லை. பதிலுக்குத் தித்திக்கும் இளநீரையும் தேங்காயையுமே தருகின்றது.

இத்தகைய மாட்டையும், தென்னையையும் போன்றவர்கள்தான் ஏழைகள். நாம் உயர்வாக அரிசி, தானிய வகைகளை உண்டு மகிழ்வதற்காக இரவு பகலாகக் காடு, வயல்களிலும், தோட்டங்களிலும் அரும்பாடு பட்டு உழைக்கிறார்கள். ஆனால் அவர்களுக்குக் கிடைக்கும் உணவோ, அநேகமாகக் கஞ்சியும் கூழுமேயாகும்.

அவர் பெரும் புகழ் பெற்ற எழுத்தாளராக விளங்கினார். ஆனாலும் ஆடம்பரமாக ஆடைகள் அணியவில்லை. சாதாரண நான்கு முழ வேட்டி, அரைக் கைச் சட்டை, சிறிய துண்டுதான் அணிந்தார். அதுவும் கைத்தறி ஆடைகள்தான்.

நல்ல ஹோட்டல் எங்கிருக்கிறது என்று பராக்குப் பார்த்தபடியே ஆடம்பரமான வாழ்க்கை நிறைந்த சென்னை வீதியிலே சிறிது தூரம் நடந்து சென்றார். அப்பொழுது அவர் முன்னால் ஒரு பெரிய ஹோட்டல் தென்பட்டது. வெகு ஆடம்பரமாகவும், புதிய அமைப்பாகவும் இருந்தது. ஹோட்டல் வாசலிலே கூர்க்கா போன்ற காவல்காரன் நின்றிருந்தான். அவன் அணிந்திருந்த ஆடையே ஆடம்பரமாக இருந்தது.

ஆண்களும், பெண்களும், சிறுவர் முதல் கிழவர் வரை அந்த ஹோட்டலுக்குள் போய் வந்தவண்ணமாகவே இருந்தனர். அதைக் கண்டதும் இது என்ன ஹோட்டலா அல்லது கலியாணச் சத்திரமா என்ற சந்தேகம் வந்தது, ஏழை ஆசிரியருக்கு. இவ்வளவு பேர் வந்து சாப்பிடுகிறார்களே, வீட்டிலே யாரும் சமைத்துச் சாப்பிட மாட்டார்களோ என்ற வியப்பு ஏற்பட்டது.

அப்படி வியந்தபடியே உள்ளே போகலாமா வேண்டாமா என்று சிந்திக்கத் தொடங்கினார்—ஹோட்டல் வாசலில் நின்றபடியே. ஆடம்பரமான அந்த ஹோட்டலுக்குச் செல்ல அவர் மனம் விரும்பவில்லை. அதன் அருகிலே வேறு ஏதாவது சிறிய ஹோட்டல் இருக்கிறதா என்று பார்த்தார். ஒன்றுமே இருப்பதாகத் தெரியவில்லை.

ஆகவே அந்தப் பிரபலமான ஹோட்டலுக்குள்ளே செல்ல முடிவு செய்தார். கால் எடுத்து ஹோட்டலுக்குள் வைத்தார். அதே சமயம் அவருடைய சட்டைப் பையிலே கையை விட்டுப் பார்த்தார். ''ஐயோ!' என்று அடுத்த நொடியே நெருப்பை மிதித்தவர் போலப் பதறினார்.

அவர் மணிப் பர்ஸைக் காணவில்லை. யாரோ 'பிக்பாக்கெட்' அடித்துக்கொண்டு போய்விட்டான். பர்ஸைப் பறி கொடுத்த ஏழை ஆசிரியர் பதறித் துடித்தார். எதிர் பாராத ஏமாற்றத்தினால் திடுக்கிட்டுச் சோர்ந்தார். ஆனால் பசி சோரவில்லை. கோரமாகப் பசித்தது.

சென்னையிலே வேறு யாரையும் தெரியாது அவருக்கு. பரிதவிப்புடன் சட்டைப் பையிலே கிடந்த சில்லறையை எண்ணிப் பார்த்தார். சரியாக இருபத்து நான்கு பைசாக்கள்தான் இருந்தன. அதுவும் வேண்டிய ஓர் இடத்துக்குப் பஸ்ஸிலே போக வைத்திருந்தார்.

என்றாலும் பசி கேட்கவில்லை.

அதனால் முதலிலே பசியைச் சிறிது தணிக்கலாம் என்று ஹோட்டலுக்குள் செல்ல முயன்றார். ஆனால் கையிலே காசு மிகவும் குறைவாக இருக்கிறதே. எப்படிப் போவது என்று ஏங்கித் தடுமாறினார்.

அந்தச் சமயத்திலே அந்த ஓட்டலுக்குச் சற்று அருகிலே உள்ள ஓர் அரசமர மேடை மீது ஒரு கிழவி உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவளைச் சுற்றி ஒரு கூட்டமே கூடி இருந்தது.

நகர சுத்தித் தொழிலாளர், வண்டி இழுப்போர், விறகு உடைப்போர், தெருக் கூட்டுவோர், கூலி வேலை செய்வோர், ஒருசில பிச்சைக்காரர் அந்தக் கிழவியைச் சுற்றி அவளை எதிர் பார்த்து அமர்ந்திருந்தார்கள்.

அவர்களுக்கெல்லாம் அந்தக் கிழவி அமுதசுரபி வழங்கிய மணிமேகலையாகத் திகழ்ந்தாள்.

இட்டிலி ஒன்று ஐந்து காசு வீதம் விற்றாள். நடுத்தரமான ஓர் ஆளுக்கு நாலு இட்டிலி போதும். அதனால்தான் அவளைச் சுற்றி அவ்வளவு கூட்டம் சூழ்ந்திருந்தது.

ஹோட்டல்களிலே ஓர் இட்டிலியின் விலை பத்துக் காசிலிருந்து பதினைந்து காசு வரை இருந்தது.



அதனும் அந்தக் கிழவி இட்டிலி ஒன்று ஐந்து காசு என்று விற்றது ஏழைகளுக்குப் பெரும் அதிர்ஷ்டமாக இருந்தது. மற்றவர்களுக்கோ ஆச்சரியமாக இருந்தது. ஆனால் கிழவிக்கோ அது சர்வ சாதாரணமாக அன்றாடத் தொழில் முறையாக இருந்தது. அது அவளுக்குப் போதுமான வருமானமுள்ள தொழிலாக இருந்தது.

அதற்குக் காரணம், அவளுக்குப் 'போதும்' என்ற மனம் இருந்ததே ஆகும்.

தேவைக்கு மீறிய அதிக லாபத்தை அவள் சேர்த்து வைக்க விரும்பவில்லை.

அன்றன்று வயிறுனது பட்டினியால் வாடாமல் வாழ வேண்டும். அதற்காக அடுத்தவரிடம் சென்று கடனோ, யாசகமோ கேட்காதபடி ஏதேனும் ஒரு தொழில் செய்து வாழ வேண்டும். அப்படி வாழ்ந்தால் போதும் என்பதுதான் அந்தக் கிழவியின் லட்சியமாக இருந்தது. அதனால்தான் ஐந்து காசுக்குத் தரமான இட்டிலியைத் தர முடிந்தது. இட்டிலி மட்டும்தானா தரமானது? சாம்பார், சட்டினி எல்லாமே தரமானவைதான்.

அதிகாலையிலே எழுந்து குளித்து, நெற்றி நிறையத் திருநீறு பூசிக் கொண்டு ஆண்டவனை வணங்கிய பிறகுதான் இட்டிலி வியாபாரத்திலே ஈடுபடுவாள்.

சாம்பாரும் சட்டினியும் போட்டி போட்டுக்கொண்டு கமகமவென்று மணம் வீசின.

பொருள்கள் எப்படிச் சுத்தமானதாக இருந்தனவோ, அப்படியே அந்தக் கிழவியின் உள்ளமும் தூய்மை உடையதாக விளங்கியது.

அந்த அரச மர மேடையைக் கூடத் தினமும் சாணி போட்டு மெழுகிக் கோலம் போட்டு வைத்திருப்பாள்.

''சுத்தமே சுகம் தரும்; சுத்தமே சுகாதாரம்!'' என்பது அந்தக் கிழவியின் ஆசாரம்! மனம் சுத்தமாக இருந்ததால்தான் ஐந்து காசுக்குக் கலப்படம் இல்லாத அருமையான சட்டினி சாம்பாருடன் இட்டிலி கொடுத்து வந்தாள். கொடுக்க முடிந்தது.

அமுத சுரபியாக விளங்கிய அந்தக் கிழவியைச் சுற்றி ஏழைத் தொழிலாளர்கள் இட்டிலிக்காக ஏங்கி இருப்பதைக் கண்ட 'ஏழை' ஆசிரியர் மனத்திலும் ஏதோ ஒரு மாற்றம் ஏற்படத் தொடங்கியது.

நாளும் அந்தக் கிழவியிடமே சென்று இட்டிலி வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று நினைத்தார். ஆனால் அவளைச் சுற்றியிருக்க



# லிப்டன் 'ரூபி டஸ்ட் டீ'

**இன்பம் தந்திடும் இனியதொரு பானம்!**
**சுவை செறிந்தது! மணம் மிகுந்தது!**
**போட்டகணமே கிட்டிடும் தேநீர்!**

சிறந்த தேயிலையைப் பருகி ரசிப்பவர் புகழ்வது ''லிப்டன்ஸ் ரூபி டஸ்ட் டீ'யையே!
ஒவ்வொரு ரூபி டஸ்ட் தேயிலைப் பாக்கெட்டும் தருவது அதிகக் கோப்பைத் தேநீர்!
செறிந்த மணம்! கெட்டியான பானம்! நேர்த்தியான சுவை!
பருகுவதிலோர் இன்பம்! விலையிலோ சிக்கனம்!




**லிப்டன் என்றாலே நல்ல டீ**




LRDC-1 TAM

கூட்டம் ஏழை ஆசிரியரின் எண்ணத்தை மாறச் செய்தது.

பரட்டைத் தலை, அழுக்குப் படிந்த ஆடை, குளிக்காத உடம்பு, கிழிந்த கந்தல் உடை, கொச்சையான பேச்சு! இவையே அந்தக் கூட்டத்திலே மிகுதியாகக் காணப்பட்டன.

இத்தகைய ஏழை எளியவர்களுக்கு மத்தியிலே தானும் அமர்ந்து இட்டிலி சாப்பிடுவது. அவருக்கு அப்பொழுது ஏனோ அவமானமாகவும், தரக் குறைவாகவும் பட்டது.

நகரத்திலே பார்த்த இடமெல்லாம் ஆடம்பரமும் டாம்பீகமும் ஆட்சி நடத்தும்போது அந்தஸ்தான நிலையில் உள்ள தாம் அவர்களோடு அரச மரத்தடியிலே அமர்ந்து சாப்பிடுவது அநாகரிகம் என்றுகூட அந்தச் சமயத்திலே நினைக்கத் தோன்றியது ஏழை ஆசிரியருக்கு.

அதனாலே அரச மரத்தடி மேடையிலுள்ள கிழவியின் இட்டிலிக் கடைக்குப் போக விரும்பாமல் எதிரே நின்ற பிரும்மாண்டமான அந்த ஹோட்டலுக்குள்ளே போக விரும்பினார் — முழுமனத்தோடு அல்ல; அரைகுறை மனத்தோடு; அதுவும் கௌரவத்துக்காக. அதிலும் வறட்டுக் கௌரவத்துக்காக. ஆமாம்; வறட்டுக்கௌரவத்துக்காக அடிமையாகித்தான் ஹோட்டலுக்குள்ளே சென்றார்.

ஹோட்டலுக்குள்ளே சந்தைக்கடைமாதிரி ஒரே கூட்டமாக இருந்தது. உட்காரக்கூட நல்ல இடம் கிடைக்கவில்லை. அவ்வளவு நெருக்கடியான கூட்டமாக இருந்தது. அதனால் கூடத்தின் மூலை ஓரமாக இருந்த ஓர் இடத்திலே போய் உட்கார்ந்தார் ஏழை ஆசிரியர். அவருக்குப் பக்கத்திலேயே பரட்டைத் தலையோடு கூடிய ஒரு பரதேசி உட்கார்ந்திருந்தான். குளித்து ஒரு மாதத்துக்கு மேலாக இருக்கும் போல் தோன்றியது.. ஒரு கெட்ட வாடை 'கப்'பென்று அடித்தது. அந்தத் துர்நாற்றம் ஏழை ஆசிரியருக்குக் குமட்டல் உண்டாகும்படி செய்தது.

அந்தப் பரதேசியைத் தள்ளி உட்காரும்படி சொல்ல ஏழை ஆசிரியரால் முடியவில்லை. ஏனெனில் அவனும் காசு கொடுத்துச் சாப்பிட வந்திருந்தான். பரதேசிக்குப் பக்கத்திலேயே அமர்ந்து சாப்பிட முடியாது என்று உணர்ந்த ஏழை ஆசிரியர் வேறு இடத்துக்குப் போகலாம் என்று எழுந்திருக்க முயன்றார். ஆனால் வேறிடம் காலியாக இல்லை.

ஏழை ஆசிரியர் உட்கார்ந்த இடத்திலே இருந்து பார்த்தால் ஹோட்டலின் உள்ளே சமையல் நடக்கும் பகுதி நன்றாகத் தெரியும். அதைப் பார்த்தபடியே அமர்ந்தார்.

அந்தச் சமயத்திலே ஒரு சர்வர் வந்து ''என்ன சார் வேணும்?'' என்று கேட்டான். அவன் கேட்பது விசாரிப்பது போல இல்லை. அதட்டுவது போல் இருந்தது. ஒரு கணம் ஏழை ஆசிரியர் என்ன சொல்வதென்று புரியாத நிலையில் ஏதோ யோசித்தார்.

அதற்குள் அந்த சர்வர் அடுத்த மேஜையைக் கவனிக்கச் சென்று விட்டான். என்ன சாப்பிடலாம் என்று யோசித்தார். அப்பொழுது தோசை வார்க்கும் ஓசை கேட்டது. ஏனோ தோசை சாப்பிட வேண்டும் என்ற ஆசை தோன்றியது. உள்ளே சமையலறைப் பக்கம் நிமிர்ந்து நோக்கினார்.

# உவகை தரும் உவமை

பிறர் நலத்துக்காகப் பாடுபடுவதனால் ஏற்படும் பயனையும், 'இன்பத்தை அறியாமல் தன் நல இன்பமே பெரிதென்று கருதி வாழ்பவனின் நிலைமையானது: அடையும் பயனானது —



நினைத்ததை யெல்லாம் நினைத்தவுடனே கொடுக்கக் கூடிய தெய்விகக் கற்பக மரத்தைப் பெற்றும் அதனைப் பயன்படுத்தத் தெரியாமல் வெட்டி எரித்து அடுப்புக் கரி சேகரித்தவன் நிலைமையைப் போன்றதாகும்!

- மனோன்மணீயம் - சுந்தரம் பிள்ளை

சமையலறை ஒரே கரித் தூசி படிந்து ஒட்டடையால் நிரம்பியிருந்தது. சுவர் எல்லாம் எண்ணெய்ப் பிசுக்கு படிந்த அழுக்காய் இருந்தது. காற்றுப் புக முடியாதபடி புழுக்கமாக இருந்தது.

மாவரைப்பவன் உடம்பிலும், தோசை வார்த்துப் போடுகிறவன் உடம்பிலும், காப்பி கலந்து கொடுப்பவன் உடம்பிலும் இருந்து வியர்வை அருவியாகப் பெருகி வழிந்தது. வியர்வையை வழித்தபடியே மாவைத் தள்ளித் தள்ளி அரைத்தான். தோசை வார்ப்பவனும் வியர்வையை வழித்தெறிந்த கையுடனேயே மாவைத் தோசைக் கல்லில் ஊற்றினான். அதே சமயம் வழித் தெறிந்த வியர்வைத் துளிகள் தோசைக் கல்லில் பட்டு 'சொய்ங்' என்ற மரண கீதம் பாடி முக்தி யடைந்தன.

அதையெல்லாம் பார்த்த ஏழை ஆசிரியருக்கு வாந்தி வரும்போல் இருந்தது. எழுந்து அப்பாலே போக முனைந்தார்.

அதே சமயம் அந்த சர்வர் வந்து ''என்ன சார் வேணும்? தோசையா? இட்டிலியா?'' என்று ஏலக் குரலில் கேட்டான். அவருக்குச் சாப்பிடவே பிடிக்கவில்லை. என்றாலும் ஹோட்டலுக்குள்ளே உட்கார்ந்து விட்டு ஒன்றும் சாப்பிடாமல் வெளியே எழுந்து போவது அவருக்குக் கௌரவக் குறைவாகப் பட்டது. ஆகவே, ''ஒரு தோசை!'' என்று கூறிவிட்டார்.

அடுத்த நொடியே ''ஒரு தோசை...'' என்ற 'ஆர்டர்' குரலோடு அந்தச் சர்வர்

அங்கிருந்து அம்பு போல் கிளம்பிவிட்டான். சர்வர் போன சிறிது நேரம் கழித்து எதிரே இருந்த பலகாரப் பொருள்களின் விலைப் பலகையைப் பார்த்தார். பார்த்ததுமே அவருக்குப் பகீரென்றது. காரணம் அறியாத பயம் ஏற்பட்டது.

உடனே அவசரம் அவசரமாகச் சட்டைப் பைக்குள் கையை விட்டுச் சில்லறையை எண்ணிப் பார்த்தார் மீண்டும். சரியாக இருபத்து நான்கு காசுகள்தான் இருந்தன. இன்னும் ஒரே ஒரு காசு வேண்டியிருந்தது. பாவம், பர்ஸ் தொலைந்ததற்குக் கூட அவ்வளவாகக் கவலைப்படாத ஆசிரியர் ஒரே ஒரு காசு குறைந்ததற்காக அஞ்சி நடுங்கினார். அவமானத்தால் பீதியடைந்தார். அதற்குக் காரணம் தோசையின் விலை இருபத்தைந்து காசு என்று போர்டில் எழுதப் பட்டிருந்ததே ஆகும்.

'ஐயோ! இருபத்து நான்கு காசுகள் தானே இருக்கின்றன! தோசைக்கு ஆர்டர் கொடுத்து விட்டேனே. என்ன செய்வது? இருபத்தைந்து காசுக்கு இருபத்துநான்கு காசு கொடுத்தால் ஹோட்டல் காஷியர் என்ன சொல்வாரோ? எவ்வளவு கீழ்த்தரமாகப் பேசுவாரோ' என்று நினைத்தபோது அவரது உடல் தரை மீறுகப் பதறியது.

அதிலிருந்து எப்படித் தப்ப முடியும் என்று சிந்தித்தார். 'ஆர்டர் கொடுத்த தோசையை வேண்டாம் என்று சொல்லி விட்டால் என்ன?' என்று ஒரு கணம் நினைத்தார். அப்படிச் செய்தால் சர்வர் என்ன சொல்வானோ? ஏதாவது கடுமையாகப் பேசுவானோ என்றும் பயந்தார். என்றாலும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தோசை வேண்டாம் என்று சொல்லி விடவும் முடிவு செய்தார்.

அந்தச் சமயத்தில் சர்வர் ஒரு தட்டிலே தோசையுடனும், மற்றொரு தட்டிலே இட்டிலியுடனும் அவர் முன்னே வந்தான்.

"சார்! உங்களுக்குத் தோசைதானே?" என்று கேட்டவன், மேலே சொல்வதற்குள் இடைமறித்து, ஆமாம் தோசைதான். "ஆனால் வந்து..." மேலே பேச—முடியாமலும் என்ன சொல்வது என்று புரியாமலும் தடுமாறினார் ஏழை ஆசிரியர்.

அப்பொழுது அந்தச் சர்வர் "சார்! தோசை தீர்ந்து விட்டது. இந்தத் தோசை உங்களுக்கு முன் 'ஆர்டர்' கொடுத்தவருக்கு. உங்களுக்கு இதோ இட்டிலி கொண்டாந்திருக்கிறேன்" என்று ஓர் இட்டிலித் தட்டை அவர் முன்னால் வைத்து விட்டு அப்பாலே போய்விட்டான்.

அதைப் பார்த்ததும் "அப்பாடா! பிழைத்தேன். ஏழை ஆசிரியனை இறைவன் காப்பாற்றி விட்டான்" என்று பெரு மகிழ்ச்சி அடைந்தார். ஆனால் அந்த மகிழ்ச்சியும் அதிக நேரம் நீடிக்கவில்லை.

இட்டிலி விலையைப் போர்ட் பலகையில் பார்த்தார். ஓர் இட்டிலியின் விலை பதின்மூன்று காசு என்று குறிக்கப்பட்டிருந்தது. அவர் தட்டிலோ இரண்டு இட்டிலிகள் வைக்கப்பட்டிருந்தன. அதை நினைத்து மனம் தவித்தார். அடை மழை விட்டும் செடி மழை விடவில்லை என்ற நிலைக்கு ஆளானார். அதிலிருந்து தப்ப என்ன வழி என்று தீரமாகச் சிந்தித்தார்.

அந்தச் சிந்தனையில் மூழ்கியதால் தட்டிலே இருந்த இட்டிலிகளைகூடத் தொடாமல் உட்கார்ந்திருந்தார்.

அப்பொழுது அவரிடம் வந்த சர்வர் "ஏன் சார், இட்டிலியைச் சாப்பிடலையா? வேறே ஏதாவது வேணுமா?" என்றான்.

ஆபத்திலிருந்து தப்ப ஆண்டவன்தான் இந்தச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தந்திருக்கிறான், இந்த வாய்ப்பை நழுவ விடாமல் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தார் ஏழை ஆசிரியர்.

"இட்டிலி எனக்கு அவ்வளவாகப் பிடிக்காது. ஒரே ஓர் இட்டிலி மட்டும் போதும்" என்று நாசுக்காகக் கூறினார். சர்வரும் அதை உண்மை என்று நம்பி ஒரே ஓர் இட்டிலியை அவர் தட்டிலே வைத்து விட்டு மற்றொன்றை எடுத்துக் கொண்டு போய் விட்டான்.

போன உயிர் திரும்பி வந்த மாதிரி புளகாங்கிதம் அடைந்தார் ஆசிரியர்.

அந்த இரண்டு இட்டிலிகளையுமே தின்ன அதிகப் பசியாகத்தான் இருந்தது. ஆனால் பையிலே இருபத்து நான்கு காசுகள்தானே இருக்கின்றன. ஆகவே ஒரே ஓர் இட்டிலியை மட்டும் தின்றுவிட்டு வெளியே வர உறுதி பூண்டார்.

அந்த ஒரு இட்டிலியையும் கூட முழுசாகச் சாப்பிடவில்லை. பாதி சாப்பிடுவதற்குள்ளாகவே சட்டினி தீர்ந்துவிட்டது. மீதியைச் சாப்பிடுவதற்குச் சாம்பார் கேட்டார். சர்வரும் சாம்பார் கொண்டு வர வேகமாகச் சமையலறைக்குப் போனான்.

சமையல் அறையில் உள்ள சாம்பார் பாத்திரத்திலே தவறி விழுந்த பாச்சை சாகத் துடித்துக் கொண்டிருந்ததைக் கரண்டியாலே எடுக்கும்பொழுது சர்வர் பார்த்தான். ஆனால் அதைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் கறிவேப்பிலையைத் தூக்கி எறிவது போல் சர்வ சாதாரணமாகத் தூக்கி எறிந்தான். எறிந்து விட்டு அதே பாத்திரத்திலிருந்து சாம்பாரைக் கொண்டு வந்து அவர் இட்டிலி தட்டிலே ஊற்றினான் — ஏழை ஆசிரியருக்கு இது ஒன்றும் தெரியாது என்ற நினைப்பிலே.

ஆசிரியருக்கோ அடுப்பறையில் நடந்த அனைத்துமே வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது! சர்வரையும், சாம்பாரையும் கண்டதுமே மனம் குமுறினார். மனம் குமட்டி மயக்கம் வரும் நிலைக்கும் ஆளானார். ஆனால் நல்லவேளையாகக் கீழே விழவில்லை.

சாம்பாரில் பாச்சை விழுந்ததைப் பற்றிக் கேட்க ஏழை ஆசிரியர் நினைத்தார். ஆனால் கேட்கத் துணிவு பிறக்கவில்லை.

அவருக்கோ ஊர் புதியது. ஹோட்டலும் புதியது. அதிலும் மிகவும் பிரசித்தி பெற்றது. அதோடு அவர் கையிலும் காசு போதுமானதாக இல்லை.

ஆகவே இட்டிலியை அந்தத் தட்டிலேயே சாப்பிடாமல் வைத்துவிட்டு, ஒரே ஓர் இட்டிலிக்கு மட்டும் உள்ள பில் தொகையை—பதின்மூன்று காசைக் கொடுத்து விட்டு வெளியேறினார்.

காஷியரிடம் பதின்மூன்று காசை பில்லுடன் கொடுத்த பொழுது, ஏழை ஆசிரி

யரை இரண்டு மூன்று முறை மேலும் கீழுமாக ஏதோ ஒரு மாதிரியாகப் பார்த்தான். பார்த்துவிட்டு, ''பதின்மூன்று காசுக்குத்தான் சாப்பிட்டீர்களா? அப்படி என்ன சாப்பிட்டீர்கள்?'' என்று பரிகாசமும் சந்தேகமும் கலந்த குரலிலே கேட்டான்.

''ஒரே ஒரு இட்டிலி மட்டும்தான்!'' என்று சொல்வதற்கே மிகவும் அவமானமாகவும், கௌரவக் குறைவாகவும் இருந்தது. எப்படியோ அதைச் சொல்லிக் காசைக் கொடுத்துவிட்டு, ஹோட்டலிலிருந்து வெளியே வந்தார்.

அப்பொழுதுதான் அவருக்குப் பயம் நீங்கி நிம்மதி ஏற்பட்டது. ஆனால் பசி மட்டும் குறையாமல் பெருகிக் கொண்டே இருந்தது.

வயிற்றுப் பசியைக் குறைக்காமல் இனி நடக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டது ஏழை ஆசிரியருக்கு. வாழ்க்கைக்கு உதவாத வெறும் வறட்டுக் கௌரவத்திலிருந்து விடுபட்டு, அந்தக் கிழவியிடம் விரைந்தார், இட்டிலிகளை வாங்கிச் சாப்பிட.

கிழவியிடம் சென்று, சுய கௌரவத்தோடு அதாவது ஏழைக்குரிய யதார்த்த கௌரவத்தோடு, ''பாட்டியம்மா! எனக்கு இரண்டு இட்டிலி கொடு'' என்று கேட்டுக் கையை நீட்டினார்.

அதே சமயம் அந்த ஹோட்டலிலே அவருக்குச் சப்ளை செய்த அந்தச் சர்வர் ஓடோடி வந்து, ''ஏ கிழவி, ஹோட்டல்லே இட்டிலி தீர்ந்து போச்சு. உடனடியா ஒரு பார்ட்டிக்கு அனுப்பணும். ஒங்கிட்ட இருக்கிற எல்லா இட்டிலிகளையும் இப்படிக் கொடு. மொத்த மாப் பணத்தைத் தந்திடறேன்'' என்று சொல்லிக்கொண்டே கிழவியின் பாத்திரத்திலிருந்த அவ்வளவு இட்டிலிகளையும் கொட்டி எடுத்துக் கொண்டு அவசரமாக ஹோட்டலுக்குள் ஓடிவிட்டான், பின்புற வழியாக.

அதைப் பார்த்த ஏழை ஆசிரியர், பிரமித்துப் பேச முடியாமல் நின்றார்.

''நான் என்னப்பா செய்யறது? இப்படித்தான் இந்த ஓட்டல்காரங்க, எப்பவாச்சும் வந்து, இந்த மாதிரி இருக்கிற இட்டிலிகளையெல்லாம் வாங்கிகிட்டுப் போயிடறாங்க. என்ன செய்ய முடியும் சொல்லு.'' என்று ஏழை ஆசிரியரிடம் இரக்கப்பட்டுக் கூறினாள்.

அப்பொழுதுதான் அவருக்குக் கௌரவம் என்பது என்ன? அது எப்படிப்பட்டது. அது எங்கே இருக்கிறது என்ற உண்மை விளங்கியது. விளங்கிய மறு விநாடியே ''ஐயோ கௌரவமே!'' என்று ஆவேசம் வந்தவர் போலக் கூறி மயங்கி விழுந்தார் ஏழை ஆசிரியர்.

## வட்டமேஜை

நாற்சந்திகளில் போலீஸ்காரர்கள் போக்குவரத்தைக் கட்டுப்படுத்துகிறார்கள். ஒரு பக்கத்து வாகனங்களை நிறுத்தி மற்றொரு பக்கத்து வாகனங்களைப் போகச் சொல்லும் போது —போலீஸ்காரர் தமது கரங்களின் நிலையை மாற்ற முற்படுமுன்னும் — வாகன ஓட்டிகளை எச்சரிக்கும் விதமாக 'விசில்' அடிப்பது முறையே. ஆனால் இதற்கு எல்லாப் போக்குவரத்துப் போலீஸ்காரர்களும் ஊது குழலைப் பயன்படுத்த வேண்டும். அதை விட்டுச் சிலர் சீட்டி அடிக்கிறார்கள். இது போலீஸ்காரருக்குச் சௌகரியமாக இருக்கலாம். ஆனால் சாலையில் செல்லும் பெண்மணிகள் தலை குனிய நேருகிறது.

சென்னை-31
26-6-69 ராஜன்

சென்ற 23-6-69 அன்று சிதம்பரத்திலிருந்து திருச்சிக்குப் பகல் எக்ஸ்பிரஸில் வந்து கொண்டிருந்தேன். தஞ்சாவூரில் ஒரு மூதியவர் எங்கள் பெட்டியில் ஏறினார். டிக்கெட் பரிசோதகர் வந்து பரிசோதனை செய்கையில் அம்மூதியவரின் தவறு தெரிந்தது. அவர் பூதலூருக்கு டிக்கட் வாங்கியிருந்தார். ஆனால் எக்ஸ்பிரஸ் அங்கு நிற்காது. சரியாய் விசாரிக்காமல் எக்ஸ்பிரஸில் ஏறியதே அவர் செய்த தவறு. எனவே திருச்சிக்கு டிக்கெட் வாங்க அதிகப் பணம் எவ்வளவு என்று அவர் வினவினார். அதற்குப் பரிசோதகர், ''திருச்சிக்கு இன்னும் ரூபாய் 1.20ம், கூடுதல் அபராதத் தொகை ரூபாய் 10ம் கட்ட வேண்டும்'' என்று கூறினார். அதிகாரி அண்மையில் ஏற்பட்ட புதுச் சட்டத்தை விளக்கி, தம் கடமையை நிறைவேற்ற அப்பிரயாணியிடம் ரூ. 11.20ஐ வசூலித்தார். அப்பிரயாணியிடம் பணம் இருக்கக் கொண்டு சங்கடத்தில் மாட்டிக் கொள்ளவில்லை. இனி அவர் திருச்சி அடைந்து, அங்கிருந்து பூதலூருக்குத் திரும்ப வேண்டும். ஓர் ஏழைக்கு இந்நிலை நேர்ந்திருப்பின் அவரால் என்ன செய்ய இயலும்? ரயிலில் டிக்கட் இல்லாமல் பயணம் செய்வோரினாலும், ரயில் பொருள்களைத் திருடுவோரினாலும் ஏற்படும் நஷ்டத்தை சரி செய்யவே இம்மாதிரி அபராதங்கள் விதிக்கப்படுகின்றன என்று கூறுகிறது அரசாங்கம். முன்பு 0.50 பைசாக்களாக இருந்த கூடுதல் தொகை இப்போது ரூபாய் பத்து எனில் அது டிக்கட் வாங்கி இம்மாதிரி தெரியாமல் தவறுகள் செய்வோரைப் பாதிக்கிறது. இம்மாதிரி நல்லோர்கள் தண்டிக்கப்படலாமா?

திருச்சி-6
25-6-69 வெ. பார்த்தசாரதி

சமீபத்திய கல்கி இதழ் ஒன்று கண்டேன். ''நன்மை பயக்குமெனில்...'' என்ற கோமதி சுப்பிரமணியம் அவர்களின் கதை நெஞ்சைத் தொட்டது. வள்ளுவர் ஈராயிரத்து ஆண்டு விழா நடைபெற்ற இவ்வாண்டு ''பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனில்'' என்ற வள்ளுவரின் வாக்கு கதையின் ஒவ்வொரு சொல்லிலும் மிளிர்வதைக் கண்டேன்.

திருச்சி-3
26-6-69 பி. வி. இராசாமணி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அனுபவமாகும் சோர்வையும் போக்குகின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்**

'ரோஷ்'




HTA-VT-8420 'ரோஷ்' தயாரிப்பு ஏகபோக விநியோகஸ்தர்கள்: வால்டாஸ் லிமிடெட்

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon